"சிகப்பழகுச் சித்திரமே கல்பனு,
சிறகடிக்கும் மோகனப்
பொற்கனு!"

# கல்பனுவின் மேனியழகு எழிலோவியமாச்சு!
# ஒளிசுடர வைத்தது ஃபேர் அண்ட் லவ்லி.

"ஆச்சா!" சிணுங்கிணுங்கிறாள் கல்பனா. பொற்சிலைதான் பேசுதோ என மலைக்கிறான் அருண். வண்ண மலரில் பதிந்த வண்டுக் கண்கள் கொட்டாமலே. செப்பிடு வித்தை இது ஃபேர் அண்ட் லவ்லியின் ஒப்பில்லாக் கைவண்ணம். இரண்டே மாதங்களில் இதமாகப் பூத்தது இயல்பான சிகப்பழகு. நங்கையின் மேனியிலே நல்லொளி சுடர. பெற்ற நிறப் பொலிவை இவ் வண்ணமே பேணிக் காக்க— கல்பனா என்றும் வேளைதவறாமல் இட்டு வருகிறாள் ஃபேர் அண்ட் லவ்லி. இனி, இயற்கைக் காட்சிகள் அல்ல, எழிலரசி கல்பனா தான் ஓவியன் அருணுக்கு வண்ணக் கற்பனை உலகமே.

கல்பனாவைப் போலவே நீங்களும் கவனிக்கத்தக்க சிகப்பழகை அடைந்திடலாம்— ஃபேர் அண்ட் லவ்லி துணையோடு.

## ஒரு முக்கிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு...

ஃபேர் அண்ட் லவ்லி, இயல்பாக உங்களை சிகப்பழகியாக்க இதிலுள்ள ஒப்பற்ற

ஃபேர் அண்ட் லவ்லி துவங்குமுன்



ஃபேர் அண்ட் லவ்லி உபயோகிக்கும் நாட்களில்

ஃபார்முலா— இரு முக்கிய வழிகளில் வேலை செய்கிறது. ஒன்று: சருமத்தின் அடியாழத்தில் செயல்பட்டு, உடல் கறுக்கும் உள்வினையைத் தடுக்கிறது—வேறெந்த க்ரீமுக்கும் இது இயலாத சாதனை. மற்றொன்று: இதிலுள்ள இரட்டை ஸன்ஸ்க்ரீன் ஆற்றல், உடல்கறுக்க வைக்கும் சூரிய ஒளியை உட்புகாதபடி தடுத்து நிறம் காத்திடுகிறது. ஆகவே 6 முதல் 8 வாரங்களில் புதிதாக மேலெழும்பும் கொழுந்துச் சருமப் படலங்களில் செவ்வையான சாயல் மிளிரும். அன்றாடம் இருமுறை ஃபேர் அண்ட் லவ்லி— நாள் தவறாமல் உபயோகித்து வந்தால், மென்மை கொஞ்சும் இயல்பான சிகப்பழகு உறுதியாக உமதாகி விடும்.

## உபயோக முறை:

கழுவிக் கொண்ட முகம், கழுத்து, கரங்கள் மீது ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமை பொட்டுப் பொட்டாக இட்ட பின், மேல் நோக்கித் தேய்க்க வேண்டும் மெதுவாக. ஃபேர் அண்ட் லவ்லி, செயல்படத் துவங்கும் போது சற்றே கூசும் உணர்வு ஏற்படுமானால் கவலை வேண்டாம், விரைவில் அது மறைந்துவிடும்.

## எளிதில் உள் உறிஞ்சப்படும்

குழைவு குணமோங்கி முன்னிலும் மென்மையாக வருகிறது ஃபேர் அண்ட் லவ்லி, ஒரே சீராகப் பரவுகிறது சருமத்தில் மேலும் எளிதில் உறிஞ்சப் படுகிறது. உடலார உணருவீர் இம் மாறுதலை...பிறகு காண்பீர் கண்ணார.

ஃபேர் அண்ட் லவ்லி பற்றி மேலும் கேட்டறிய விரும்பினீரானால் எழுதுங்கள் இம் முகவரிக்கு:
திருமதி கவிதா குமார், ஃபேர் அண்ட் லவ்லி அட்வைசர், பி.ஓ. பாக்ஸ் 758,
பம்பாய்-400 021.

## ஃபேர் அண்ட் லவ்லி
சிகப்பழகு க்ரீம்




## கண்காணும் சிகப்பழகை உமதாக்கும்...இயற்கைக்கே உரிய இதமான வழியில்

LINTAS FAL 67 2517 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# என்

## இதயம் இந்தியாவுக்காகத் துடிக்கிறது : காங்கிரஸுக்காக அல்ல!













கருத்து: மௌனஷ்மி.

தேர்தல் ஸ்பெஷல்:
டெல்லி, அமேதி, ஃபதேபூர்
– நேரடி ரிப்போர்ட்:

# "காங்கிரஸை ஆதரிக்க

புதுடெல்லி, 24, அக்பர் ரோடு, காங்கிரஸ் கட்சியின் தலைமை அலுவலகம், மிகவும் பரபரப்பாக இருந்தது. பெரிய, பெரிய கோணி மூட்டைகளை ஆட்கள் லாரிகளில் ஏற்றுவதும் இறக்குவதுமாக இருந்தார்கள். அவ்வளவும் போஸ்டர்கள், பேனர்கள்! ஏதோ கல்யாண வீடு போல ஒரு பக்கம்



• ஜகதீஷ் டைட்லர்: ''போஃபோர்ஸ் ஒரு பிரச்னை இல்லை.''



• அகமது ஹாஸனைன்: ''காங்கிரஸ தப் பணப் பிரச்னை!''

பிரம்மாண்டமான பாத்திரங்களில் சமையல் நடந்து கொண்டிருந்தது! 'கண்ட்ரோல் ரூம்' என்று போர்டு எழுதப்பட்ட ஓர் அறைக்கு வெளியே கும்பல் ஒன்று நெக்கியடித்துக் கொண்டிருந்தது. போர்ட்டபிள் மைக்கில், பைஜாமா குர்தா போட்ட காங்கிரஸ் தொண்டர் ஒருவர் முழங்கிக் கொண்டிருந்தார். ''நமது நாட்டை ஆபத்து சூழ்ந்து கொண்டிருக்கிறது. காங்கிரஸ் கட்சி ஒன்றுதான் நாட்டைக் காப்பாற்ற முடியும்'' என்ற வழக்கமான கோஷத்தைத்தான் அவர் போட்டுக் கொண்டிருந்தார். காங்கிரஸ் அலுவலகத்தினுள்ளேயே பிரசாரமா? தேர்தல் டிக்கெட் கிடைக்காத காங்கிரஸ்காரர்கள் ஆங்காங்கே கும்பலாக நின்று கொண்டிருப்பதைப் பார்த்தபோது இங்கும் இந்தப் பிரசாரத்துக்கு அவசியம் இருப்பது புரிந்தது!

உ. பி. மாநிலம், மதுராவைச் சேர்ந்த டாக்டர் ஓம்பிரகாஷ் ஷர்மாவை அங்கு சந்தித்தோம். ''எங்கள் சட்டமன்றத் தொகுதியில், லோக் தளத்தைச் சேர்ந்த தலைவர் ஒருவரது மகனுக்கு ஸீட் கொடுத்திருக்கிறார்கள். அவர் சமீபத்தில்தான் காங்கிரஸில் சேர்ந்தார். பல்லாண்டுகளாகக் காங்கிரஸில் பாடுபட்ட என்னைப் போன்றவர்களுக்குப் பட்டை நாமம் போட்டு விட்டார்கள்; எல்லாம் நியூ டெல்லி திவாரியின் (உ. பி. முதல்வர் N. D. திவாரியைக் குறிப்பிடுகிறார்) வேலை. எங்கள் மாநிலத்தில் பெரும்பாலான காங்கிரஸார் அதிருப்தியுடன் இருக்கிறார்கள். பாராளுமன்றத் தேர்தல் முடிவுகள் இதைப் பிரதிபலிக்கும் பாருங்கள்'' என்று ஆவேச முழக்கமிட்டார் அவர். நாங்கள் பேட்டி கண்டு கொண்டிருந்தபோது கனடா சி.பி.ஸி. டெலிவிஷன்காரர்களும் வந்துவிடவே, ஷர்மா மிகவும் பிஸியானார். இவற்றையெல்லாம் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தார்கள் அங்கிருந்த உளவுத் துறையினர் (I. B.)

தினசரி, காங்கிரஸ் அலுவலகத்தில் நடக்கும் ஆனந்த் சர்மாவின் மாலை ஐந்து மணி பிரஸ் கான்பரன்ஸ் கொஞ்சம் தலை



• காங்கிரஸ் அதிருப்தியாளர் டாக்டர் ஓம்பிரகாஷ் ஷர்மா

# ஒரு காரணத்தைச் சொல்லுங்கள்!"

கீழ்தான். காங்கிரஸ் தலைமை அலுவலகம், பாராளுமன்றத் தொகுதி ஒவ்வொன்றுக்கும் ஒரு நம்பர் கொடுத்திருக்கிறது. பிரஸ் கான்பரன்ஸில் ஒரு நிருபர், ''மிஸ்டர் சர்மா, தொகுதி நம்பர் 420 — இன் நிலை என்ன?'' என்று கேட்டவுடன் முதலில் ஒருவருக்கும் ஒன்றும் புரியவில்லை. பின்னர் கையிலிருந்த காங்கிரஸ் லிஸ்டைப் பார்த்த போது 420 — ஆம் எண்ணுள்ள தொகுதி, மத்திய மந்திரி அன்சாரி போட்டியிடும் தொகுதி என்று புரிந்தது. ஒரு சமூக சேவகியிடம் அன்சாரி முறைகேடாக நடந்து கொண்டதாகப் பெரிய சர்ச்சை நடந்து கொண்டிருக்கிறது. இ. பி. கோ. 420 — ஆம் பிரிவு, பொய், மோசடி, பித்தலாட்டம் போன்றவற்றைப் பற்றியது. இந்த நம்பர் உள்ள தொகுதி அன்சாரிக்குக் கிடைத்திருப்பதைத்தான் குத்திக் காட்டினார் அந்த நிருபர். ஒரு வகையாக நிலைமையைச் சமாளித்த சர்மா, ''எல்லாவற்றுக்கும் பொருத்தம் பார்க்கக் கூடாது'' என்று கூறி வழிந்தார்.

பாவம்... தினமும் நிருபர்கள் முன் படாத பாடு படுகிறார் சர்மா. தேர்தல் முடியும் வரை அவர்தான் காங்கிரஸின் பேச்சாளர். அதாவது ஸ்போக்ஸ்மேன்! காங்கிரஸ் அலுவலகத்தில் நடந்து வருகின்ற காரியங்களைப் பார்த்தபோது கடந்த பல மாதங்களாகவே காங்கிரஸ் தயார் நிலையில் இருந்து வருவது புரிய வந்தது. அலுவலகத்தை விட்டு வெளியே வந்தபோது பெரிய பட்டாளத்



* சஞ்சய் சிங்: ''ஜனதா தளம் முந்நூறு இடங்களுக்கு மேல் பிடிக்கும்...''





* காங்கிரஸ் தலைமை அலுவலகத்திலேயே பிரசாரம்!





* ஷாத் ரஸ்தோகி: ''எங்கள் தொகுதி (ஃபதேபூர்) மிகவும் பின்தங்கியது...''



* கட்டுக்கட்டாகக் காங்கிரஸ் போஸ்டர்கள் — வீடியோ சத்துக்கு.





● ஹரி கிருஷ்ண சாஸ்திரி (போஸ்டர்)

துடன் நடந்து வந்தார், உ. பி. உள்துறை ஜூனியர் மந்திரி சைதுல் ஹாசன். "போபர்ஸ் எல்லாம் ஒரு பிரச்னையே இல்லை. முஸ்லிம்கள் எல்லாம் ராஜீவின் பின்னால்தான் இருக்கிறோம்'' என்றார் அவர்.

இந்தத் தேர்தலில் போஃபர்ஸ் விவகாரம் பெரிய பிரச்னையா? லக்னோ வழியாக அமேதி தொகுதிக்குச் செல்வதற்காகப் புதுதில்லியிலிருந்து கோம்தி எக்ஸ்பிரஸில் விரைந்து கொண்டிருந்தோம். அருகிலிருந்த ஸீட்டில் நான்கு பேர் பலமான சர்ச்சையில் இறங்கியிருந்தார்கள். 'விலைவாசி, சர்க்கரை' என்று பேசினார்களே தவிர போஃபர்ஸ் என்ற வார்த்தையே அவர்கள் வாயில் வரவில்லை. பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஓர் இளைஞரிடம் விசாரித்தோம். அவர் பெயர் ராகுல் பதக். லக்னோ பல்கலைக் கழகத்தில் சட்டம் படிக்கிறாராம். ''நாங்கள் விவசாயக் குடும்பம். பிறவியிலேயே நான் காங்கிரஸ் எதிர்ப்பாளன்!'' என்று கூறி நம்மை அசத்தினார். 'என்ன காரணம்?' என்று விசாரித்த போது, 'காங்கிரஸை ஆதரிப்பதற்கு ஏதாவது ஒரு காரணத்தை நீங்கள் சொல்லுங்களேன், பார்ப்போம்!'' என்று நம்மையே மடக்கினார் அவர்!

லக்னோவிலிருந்து சற்றேறக்குறைய நான்கு மணி நேரம் பயணித்தால் வருகிறது அமேதி ஸ்டேஷன். ('அமேடி' என்பதுதான் சரியாம்.) மிகச் சிறிய ஊர்தான். ஸ்டேஷன் மட்டும் அழகாகவும், பெரியதாகவும் இருக்கிறது. வி.வி.ஐ.பி. ஊராயிற்றே! ஸ்டேஷனில் இருந்து வெளியே வந்தால் கூப்பிடு தூரத்தில் இருக்கிறது, ஜனதா தள அலுவலகம். சக்கரம் போட்ட பச்சைக் கொடி மேலே படபடக்கிறது. உள்ளே இளைஞர்கள்... இளைஞர்கள்... இளைஞர்கள்! ஒரு ஜீப்பையோ, காரையோ காண முடியவில்லை. அரசாங்க உத்தியோகத்தில் இருக்கும் சன்ஜய் அகர்வால் லீவு போட்டு விட்டு வந்து வேலை செய்கிறார். "எங்கள் தொகுதியில் பல வளர்ச்சிப் பணிகள் நடந்துள்ளன. தொழிற்சாலைகள் உருவாகியுள்ளன. எல்லாம் ராஜீவ் தொகுதி என்பதால்தான். ஆனால் அதற்காகவே அவருக்கு வோட்டுப் போட முடியுமா? பிரிட்டிஷார் ஆண்டபோது, ரயில், தொலைபேசி, பல பெரிய தொழிற்சாலைகள் எல்லாம் உருவாக்கினார்கள். அதற்காகவே காலா காலத்துக்கும் பிரிட்டிஷாரின் அடிமைகளாக நாம் இருக்க விரும்பினோமா? வளரும் நாடுகளில், வளர்ச்சிப் பணிகள் நடப்பதும் தொழிற்சாலைகள் வருவதும் சகஜம்தான். நாளை ஜனதா தளம் ஆட்சிக்கு வந்தால் இவையெல்லாம் நின்றுவிடுமா என்ன?''

''போஃபர்ஸ் பற்றிக் கிராம மக்களுக்குத் தெரியுமா?''

''முழு விவரங்களும் தெரியாது. ஆனால் ராஜீவ் ஒரு 'தலாலி' (DALALI) என்று தெரியும்!' ('தலாலி' என்றால் இந்தியில் இடைத்தரகர், கமிஷன் வாங்குபவர் என்று பொருள்!)

அமேதியிலிருந்து அறுபது கிலோமீட்டர் தூரத்தில் ஷுகுல் பஜார் என்ற இடத்



## அடுத்த இதழில்...

**போஃபர்ஸ் ஊழல்: ராஜீவை வீழ்த்துமா?**

அஷ்ட லஷ்மி - 8





தனலஷ்மி

எங்கும் மங்களம் தங்கிட - அன்னையே!
நின்னருள் மழையால்
பொங்கிடும் செல்வம் தந்திட வேண்டும்.
இம்மாநிலத்து மாந்தர் தம் துயரங்கள்
யாவும் நீங்கிட வேண்டும்.

# பொருட் செல்வத்தோடு அறிவுச் செல்வம்— சிட்டி யூனியன் வங்கியின் துணையுடன்!

தொடர்ந்து சேமிப்பதுதான் பாதுகாப்புக்கும் மகிழ்ச்சிக்கும் நிச்சயமான வழி என நம்புகிறது சிட்டி யூனியன் வங்கி.

சேர்த்த பணம் செலவழிந்து விடும் - எனவே அந்தப் பணத்தை பல மடங்காய்ப் பெருக்கி உதவிடச் செய்கிறது சிட்டி யூனியன் வங்கி.

ஒவ்வொருவர் தேவைக்கும் ஏற்ற பல சேமிப்புத் திட்டங்கள்!

தேர்ந்தெடுக்கப் பல திட்டங்கள்:

- சேமிப்புக் கணக்கு
- மாதாந்திர சேமிப்புத் திட்டங்கள்
- ரொக்கப் பத்திரங்கள்
- வாமன விஸ்வரூப வைப்புத் தொகை
- கால வரை வைப்புத் தொகை
- வெளிநாட்டில் வாழ்வோர் சேமிப்புக் கணக்கு

*நாடுவீர் எம்மை—*
*பெறுவீர் நன்மை!*




CUB

**சிட்டி யூனியன் பாங்க் லிட்.,**

பதிவு அலுவலகம்: கும்பகோணம்–612 001.

CUB – உங்கள் வளர்ச்சிக்கேற்ற வங்கி.

MCS/CUB/375

# உங்கள் பால்காரரர் ரயிலில் பால் கொண்டு தருவாரா?

என் பால்காரரர் தருவார்.

பிரயாணத்தின் போது சாப்பாடு மற்றும் பானங்கள் விஷயத்தில் நீங்கள் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். பால் திரிந்து விடும் அல்லது விரைவில் புளித்துப் போய் விடும். இது போன்ற சமயங்களில் அமுல் மில்க் பவுடர் டின் கையோடு கொண்டு செல்லுங்கள்.

அமுல் மில்க் பவுடர். கொண்டு நீங்கள் தூய்மையான, ஆடை நிறைந்த பாலை நொடியில் தயாரித்து விடலாம். அப்படியே அருந்தலாம். தேனீர், காப்பி, தயிர், மோர், பாயசம், கஸ்டர்ட், கேக், ரஸகுல்லா எது வேண்டுமோ தயாரிக்கலாம்.




**அமுல்**
**மில்க் பவுடர்**

**வீட்டினுள் இயங்கும் ஒரு பால்பண்ணை.**



விற்பனைக்கு விடுப்போர் : குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெடிங் ஃபெடரேஷன் லிட்., ஆனந்த் 388 001

OPERATION FLOOD

தில் ராஜ்மோகன் காந்தி பிரசாரம் செய்வதை அறிந்து அங்கே விரைந்தோம். விவசாயப் பெருமக்கள் கோதுமை அறுவடையில் இறங்கியிருந்தார்கள். நாங்கள் சென்றபோது எதிரே புத்தம்புது மகேந்திரா ஜீப்புகள் காங்கிரஸ் கொடிகளோடு வந்துகொண்டிருந்தன. ''முப்பது ஜீப்புகள்'' என்று கணக்குச் சொன்னார் எண்ணிக்கொண்டு வந்த நமது புகைப்படக்காரர்! பணத்தை வாரி இறைத்திருக்கிறார் ராஜீவ். உண்மையிலேயே பல நல்ல பணிகள் செய்திருந்தும், ராஜீவ் இப்போது தேர்தலுக்காகவும் பணத்தை வாரி இறைப்பதன் அர்த்தம் என்ன? அஸ்தியில் ஜுரம்— அதுதான் அர்த்தம். ''ராஜீவின் தோழர் கேப்டன் சதீஷ் சர்மாவும், சோனியா காந்தியும் கிராமம் கிராமமாகச் சென்று பணத்தை விநியோகித்து ஆதரவைத் தேடி வருகிறார்கள்'' என்றார் உள்ளூர் பத்திரிகை நண்பர் ஒருவர். பல இடங்களில் சுவரில் 'அமேதியின் புத்ரி பிரியங்கா' என்று எழுதி உள்ளூர் காங்கிரஸ்காரர்கள் அடிமை புத்தியைக் காண்பித்திருக்கிறார்கள். மஹோனா என்ற கிராமத்தில் கிட்டத்தட்ட ஒரு கி. மீ. தூரம், மரம், வீடு, கோயில், மசூதி என்று எல்லா இடங்களிலும் காங்கிரஸ் மூவர்ணங்களை அடித்து வைத்திருக்கிறார்கள். பிரமிப்பாக இருந்தது. தொகுதியில் பல இடங்களில் புத்தம்புது கட்டடங்களில், டெலிபோன் தொடர்புகளோடு காங்கிரஸ் காரியாலயங்கள். இதற்கு மறுபுறமாக எளிய விவசாய மக்கள் பலரைச் சந்தித்த போது அவர்கள் காங்கிரஸின் மீது ஒருவித வெறுப்பு கொண்டிருப்பது புரிய வந்தது. இப்படி அளவுக்கு மீறிப் பணத்தை வாரி விடுவதே ஓர் எதிர்ப்பைத் தோற்றுவித்திருக்கிறது. ராஜீவ் ஒரு தலாலி என்பதை இந்தப் பணச் செலவு உறுதிப்படுத்துவதாக எண்ணுகிறார்கள். ஆனால் ஆரம்ப கட்டத்தில் உள்ள இந்த வெறுப்புணர்வைப் பரவலாக்கி வோட்டுக்களாக மாற்றுமா ஜனதா தளம்?

ஷுகுல் பஜார் ஒரு சின்ன நகரம். சந்தை ஒன்றின் பக்கத்தில் நூறு பேர் அடங்கிய கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தார் ராஜ்மோகன் காந்தி. ''என் கடமை, நான் நிற்கிறேன். நாட்டு நிலையை உணர்ந்து உங்கள் ஆதரவைத் தாருங்கள்'' என்று கூறி போஃபர்ஸ் ஊழலைச் சுட்டிக்காட்டினார். புரிந்து கொண்ட கூட்டம், 'ராஜீவ் காந்தி முர்தாபாத்' என்று கோஷமிட, ''மகாத்மா காந்தி கா போத்ரா டீக் போல் ரஹா ஹை'' (மகாத்மாவின் பேரன் சரியாகத்தான் சொல்கிறார்) என்று முண்டாசு கட்டிய விவசாயி ஒருவர் அடுத்தாற்போல் இருக்கும் ஒருவரிடம் கூறினார்.

ஓர் அம்பாசிடர் காரில் மனைவி சகிதம் கிராமம் கிராமமாகச் செல்கிறார் ராஜ்மோகன். கூட இரண்டு பழைய ஜீப்புகளில் தொண்டர்கள். 'ஒவ்வொரு வாக்காளரையும் நேரடியாகச் சந்திப்பதுதான் சரி' என்று சொல்கிறார்.



* ஜனதா தள கொடி, பாட்ஜுகள் விற்பனை...

அமேதி தொகுதியை விட்டுப் புறப்படுவதற்கு முன்னர் சஞ்சய்சிங்கைச் சந்தித்தோம். உ. பி. அரசியலில் தவிர்க்க முடியாதவர் சஞ்சய்சிங். அமேதி ராஜ பரம்பரையைச் சேர்ந்த இவர், சஞ்சய் காந்தியால் அரசியலுக்கு வந்தவர். 'சென்ற பல தேர்தல்களில் இந்திரா காந்தியின் குடும்பத்தினருக்காக உழைத்தவர். தற்போது வி. பி சிங்கின் அத்யந்த சீடர்! ''இதனாலேயே இவர் மீது கொலை வழக்கு (சையத் மோடி கொலை) போட்டிருக்கிறது சி. பி. ஐ.'' என்று சொல்கிறார்கள் ஜனதா தளக் கட்சியினர். முதுகுத் தண்டில் ஆபரேஷன் செய்துகொண்டு தற்போது அமேதி அரண்மனையில் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கிறார் சஞ்சய்சிங். எங்கேயும் செல்லாமல் அமேதி பாராளுமன்றத் தொகுதிப் பணிகளை இருந்த இடத்திலிருந்தே கண்காணிக்கிறார்.

''1977 திரும்பி வரப் போகிறது. கிட்டத்தட்ட 300 இடங்களை எதிர்க்கட்சியினர் கைப்பற்றுவார்கள். சந்தேகமே வேண்டாம்!'' என்கிறார் அவர்.

ராஜீவ், ராஜ்மோகன் தவிர, அமேதி தொகுதியில் நிற்கும் மற்றொரு முக்கிய புள்ளி பகுஜன் சமாஜ் கட்சித் தலைவர் கன்ஷிராம். ''பிற்படுத்தப்பட்ட மக்களின் வாக்குகளைக் காங்கிரஸிடமிருந்து பிரிக்க எதிர்க் கட்சியினரால் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறார்'' என்று சொல்கிறார்கள் காங்கிரஸார். இதைப் பற்றி சஞ்சய் சிங்கிடம் கேட்டால் சிரிப்புத்தான் பதிலாக வருகிறது!

* 'அமேதியின் புத்ரி ப்ரியங்கா'



**ப**ணபலம், அதிகார பலம் ஆகியவற்றுக்கு எதிராகப் போட்டியிடும் ராஜ்மோகன் காந்தியின் வெற்றி வாய்ப்பு எப்படி இருக்கிறது?

தொகுதிக்கு வராமலேயே வெற்றிக் கனியைத் தட்டிக் கொண்டு போய் விடலாம் என்று நினைத்த ராஜீவுக்கு இப்போது பெரிய தலைவலி! தொகுதிக்கு வோட்டு வேட்டையாட வர வேண்டியிருக்கிறது. மனைவியும், மகளும், நண்பர்களும் கிராமம், கிராமமாக அலைகிறார்கள். ராஜமோகன் காந்தியைத் தவிர வேறு யாராவது போட்டியிட்டிருந்தால் இவ்வளவு பிரசாரம் செய்ய வேண்டிய அவசியமே ராஜீவுக்கு ஏற்பட்டிராது. ''அந்த அளவில் பார்த்தால் ராஜ்மோகன் காந்திக்குத் தார்மீக அளவில் பெரிய வெற்றி ஏற்கெனவே கிடைத்து விட்டது!'' என்றார் டெல்லி பத்திரிகை நண்பர் ஒருவர்.

''தேர்தலில் ராஜ்மோகன் காந்தி தோற்றாலும், ஒரு நல்ல, நேர்மையான தேர்தல் பிரசாரம் எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு அவர் நடத்தை ஓர் எடுத்துக்காட்டாக இருக்கும்.''

**அ**மேதிக்கு அடுத்தபடியாக நாட்டு மக்களின் கவனத்தைக் கவர்ந்திருக்கும் தொகுதி வி. பி. சிங் போட்டியிடும் ஃபதேபூர் தொகுதி. கங்கைக்கும், யமுனைக்கும் இடையில் இருக்கும் வளமான பகுதி. சிங்கை எதிர்ப்பவர் லால்பகதூர் சாஸ்திரியின் மகன் ஹரிகிருஷ்ண சாஸ்திரி. காங்கிரஸைச் சேர்ந்த இவர், மூன்றாவது முறையாக இந்தத் தொகுதியில் போட்டியிடுகிறார். சென்ற இரண்டு தடவைகளும் பல்லாயிரக்கணக்கான வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றவர். ஆனால் இந்த முறை வெற்றித் திருமகள் இவருக்கு மாலையிடுவாளா?

ஃபதேபூர் தெருக்களில் எந்த சுவரில் பார்த்தாலும் சாஸ்திரியின் பெயர் மூவர்ணத்தில் பளிச்சிடுகிறது. தெருக்கள் சந்திக்கும் இடங்களில் காங்கிரஸ் வர்ணங்கள் புடைவைகள் போல் தொங்க விடப்பட்டுள்ளன.

இதற்கு நேர்மாறாக இருக்கிறது வி. பி. சிங்கின் பிரசாரம். வி. பி. சிங் இந்தத் தொகுதியில்தான் போட்டியிடுகிறாரா என்று கேட்க வேண்டிய நிலை! சிங் பிரசாரத்துக்குப் பொறுப்பாக இருக்கும் ராம் ரத்தன் சிங்கைச் சந்தித்து இது பற்றி விசாரித்தோம். ''தேர்தலில் செலவு செய்யப் பணம் வேண்டும். பணம் வேண்டுமானால் பெரிய தொழிலதிபர்களிடம் போக வேண்டும். அவர்களிடம் பணத்தைப் பெற்றால் பின்னர் அவர்களுக்குச் சலுகை செய்து தர வேண்டும்... ஊழல் என்று பேசுவார்கள்.. தேவைதானா? அதிகப்படியாகச் செலவுகள் செய்து தேர்தலைச் சந்திக்கும் முறையை நாங்கள் மாற்ற நினைக்கிறோம். நடைமுறையையே மாற்ற வேண்டும். அதற்காகப் பிரசாரமே இருக்காது என்றில்லை. ஆடம்பரம் இராது. சிங் மோட்டார் சைக்கிளில் கிராமம், கிராமமாகச் சென்று மக்களைச் சந்திப்பார். வி. பி. சிங்கின் குடும்பத் தொகுதி இது என்று சொல்லலாம். அவரது அண்ணன் பக்ஸ் சிங் பத்து வருடங்கள் இந்தத் தொகுதியின் பாராளுமன்ற உறுப்பினராக இருந்திருக்கிறார்.''

**தொ**குதி முழுக்க சிங்கின் உறவினர்கள் படர்ந்து இருக்கிறார்களாம். ஹரிகிருஷ்ண சாஸ்திரி பத்து வருடங்கள் இந்தத் தொகுதியின் பிரதிநிதியாக இருந்தும் பலனேதும் இல்லையாம். வங்கியில் வேலை செய்யும் ஷரத்ரஸ்தோகி தொகுதியின் பிரச்னைகளை எதிரொலித்தார்: ''ரொம்பவும் பின்தங்கிய தொகுதி. இந்த நகரத்தில் நீங்கள் எங்கேயும் சாப்பிடக் கூட முடியாது. அவ்வளவு அசுத்தமான நகரம். சாஸ்திரி, ஒரு சிறிய உரத் தொழிற்சாலை,

* ராஜ்மோகன் காந்தி: ''நாட்டு நலன் கருதி வாக்களியுங்கள்...''



இன்சுலேட்டர் தொழிற்சாலை, ஸ்பின்னிங் மில் ஆகியவற்றைக் கொண்டு வந்தார். இதனாலெல்லாம் உள்ளூர் இளைஞர்களுக்குப் பெரிய அளவில் வேலை வாய்ப்பு ஒன்றும் கிடைக்கவில்லை. கான்பூர் தொழிலதிபர்களுக்குத்தான் யோகம் அடித்தது. இந்த நகரம் டெல்லி — கல்கத்தா நெடுஞ்சாலையில் இருக்கிறது. எப்போதும் கனரக வாகனங்களின் போக்குவரத்து. நெடுஞ்சாலையில் பல கல்விக் கூடங்கள், ஆஸ்பத்திரி, அலுவலகங்கள் இருக்கின்றன. வேகமாகப் போகும் வாகனங்களால் பல விபத்துக்கள் ஏற்படுகின்றன. ஒரு வருடத்துக்குச் சராசரியாக இருபது நபர்கள் இறந்து போகிறார்கள். ஒரு பை—பாஸ் ரோடு போடுங்கள்' என்று நகர மக்கள் குரல் கொடுத்துக் கொண்டிருப்பது யார் காதிலும் விழவில்லை. சிங்கைப் பொறுத்த வரை அவரைத் தேர்ந்தெடுத்து அனுப்பினால், ஒரு தேசியத் தலைவரைத் தேர்ந்தெடுத்த பெருமை எங்களுக்கு இருக்கும்...'

சிங்கைத் தோற்கடிக்கப் பல லட்சங்களைச் செலவு செய்து கொண்டிருக்கிறது காங்கிரஸ். ஏற்கெனவே பத்து லட்சம் செலவு செய்திருக்கிறார்களாம்! 'தேர்தல் நெருங்க நெருங்க.. கோடிகள் சகஜமாகி விடும்' என்றார் நகரப் பிரமுகர் ஒருவர். ஆனால் காங்கிரஸ் சார்பில் தேர்தல் பிரசாரத்துக்குப் பொறுப்பாக இருக்கும் அகமது ஹுசைன், ''பணம்தான் எங்களுக்குப் பிரச்னை'' என்று கூறுகிறார்! ''முழுக்க முழுக்க, ஹரிகிருஷ்ண சாஸ்திரி செய்த பல நல்ல பணிகளை நம்பித்தான் தேர்தலை நாங்கள் சந்திக்க வேண்டியிருக்கிறது. தொகுதிமுழுக்கப்பலநூறுகிராமங்களுக்கும் மின் வசதியும், குழாய்க் கிணறு வசதியும் செய்து தந்தவர் சாஸ்திரி. சொந்த வீடு கூட இல்லாதவர். தொகுதிக்கு மாதமிரு முறை வந்து, மக்களைச் சந்திப்பவர். மக்கள் எங்களைக் கைவிட மாட்டார்கள் என்று நம்புகிறோம்'' என்கிறார் ஹுசைன்.



* வாஜ்பாயி: ''எந்தக் கட்டத்திலும் காங்கிரஸுக்குத் தோள் கொடுக்க மாட்டோம்''

தொகுதி மக்களில் பலர் சாஸ்திரியைப் பற்றி வேறுவிதமாகப் பேசுகிறார்கள்.

மாதத்துக்கு ஒருமுறை கூடத் தொகுதிப் பக்கம் தலைகாட்டாதவர் என்று குற்றம் சாட்டுகிறார்கள்!

அவரது மகன் திவாகர் சாஸ்திரி ராஜஸ்தானத்தில் குளிர்ப்பான தொழிற்சாலை ஒன்று வைத்திருக்கிறார். இப்போது வீசும் காங்கிரஸ் எதிர்ப்பு அலையில் ஹரி கிருஷ்ண சாஸ்திரி அடித்துச் செல்லப் படுவார் என்கிறார்கள். கூட்டி — கழித்துப் பார்த்தால் பிரச்னை ஏதும் இல்லாமல் சிங் வெற்றிக் கனியைப் பறித்து விடுவார் என்றே தோன்றுகிறது.

சென்னைக்குத் திரும்பி வரும் போது டெல்லியில் தேசிய முன்னணியின் அலுவலகத்துக்குச் சென்றிருந்தோம். காங்கிரஸ் செய்யும் விளம்பரப் பிரசாரத்தைக் குறித்துப் பேராசிரியர் லட்சண்ணாவைக் கேட்டோம். ''நிச்சயமாக எங்களால் அது போன்று செய்ய முடியாது. நாளிதழ் விளம்பரங்களுக்கு மட்டும் ஒவ்வொரு நாளும் காங்கிரஸ் முப்பத்தைந்து லட்சம் செலவு செய்கிறது. நாங்கள் எங்கே போவது?''

* ராஜ்மோகன் மனைவியுடன் பிரசாரக் கூட்டத்தில்....



ஜனதா தளத்தைப் பொறுத்தவரை அதற்குக் கிடைத்திருக்கும் புதுச் சின்னமான சக்கரத்தை மக்களுக்கு அறிமுகப்படுத்தவே போதிய அளவு பணம் இல்லை. அதைப் பிரபலப்படுத்துவது எப்படி? ஜனதா தளச் சின்னம் போட்ட ஸ்டிக்கர்கள், பேட்ஜுகள், பேனர்கள் ஆகியவற்றை விற்பனை செய்கிறார் டெல்லியைச் சேர்ந்த வியாபாரப் பிரமுகர் ஒருவர். ஜனதா தள அலுவலகத்தில் விற்பனை செய்து கொண்டிருந்த இவரைச் சந்தித்த போது விற்பனை பற்றி உற்சாகமில்லாமல்தான் பேசினார்!

பி. ஜெ. பி. தலைவர் அத்வானி நிற்கும் புது டெல்லி தொகுதி முக்கியமானது. ராஷ்ட்ரபதி பவன், பிரதமர் வீடு உட்பட எல்லா வி. வி. ஐ. பிக்களின் வீடுகளும் இந்தத் தொகுதியில்தான் வருகின்றன! இது தவிர சிறு வியாபாரப் பிரமுகர்கள், அரசு ஊழியர்கள் பெரும்பாலோர் இருக்கிறார்கள். அத்வானியை எதிர்ப்பவர் காங்கிரஸ் வேட்பாளரான மோஹினி கிரி. மறைந்த ஜனாதிபதி வி. வி. கிரியின் மகள். இந்தத்தொகுதியில்விலைவாசி,போஃபர்ஸ், பஞ்சாப் போன்ற பெரிய பிரச்னைகள் வாக்காளர்களால் அலசப்படும். ''அத்வானியின் வெற்றியில் சந்தேகமில்லை'' என்றார் டெல்லி நண்பர் ஒருவர்.

கடைசியாகச் சென்னைக்குக் கிளம்பும் முன் பாரதீய ஜனதா கட்சித் தலைவர் வாஜ்பாயைச் சந்தித்தோம். ஒரு மினி பேட்டி:

கேள்வி: உங்கள் கட்சியின் வெற்றி வாய்ப்பு எப்படி இருக்கிறது?

பதில்: 205 இடங்களில் பாராளுமன்றத்துக்குப் பா. ஜ. போட்டியிடுகிறது. இத்தனை இடங்களில் வெற்றி பெறுவார்கள் என்று கணக்குச் சொல்லி, பாக்கி இடங்களில் எங்கள் வேட்பாளர்களைத் தேர்தலுக்கு முன்பே தோற்கடிக்க நான் விரும்பவில்லை (சிரிப்பு).

கே: மார்க்ஸிஸ்ட் கட்சியையும் உங்கள் கட்சியையும் இரு குதிரைகளாக வைத்துச் சவாரி செய்யும் ஜனதா தளத்தைப் பற்றி?

ப: இந்தி பேசும் மாநிலங்களில் சி. பி. எம்.முக்குச் செல்வாக்கு இல்லை. அதனால் எங்களை ஒதுக்கி விட்டு ஜனதா தளத்தின் தோள்களில் உட்கார்ந்து கொண்டு அந்த மாநிலங்களில் கம்யூனிஸ்டுகள் செல்வாக்குப் பிடிக்க முயல்கிறார்கள். ஆனால் ஜனதா தளம் பி. ஜெ. பி. யின் முக்கியத்துவத்தை நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறது.

கே: தேர்தலில் காங்கிரஸுக்குப் பெரும்பான்மை இடங்கள் கிடைக்காத நிலையில் பி. ஜெ. பி.யின் ஆதரவைக் காங்கிரஸ் கேட்டால் உங்கள் நிலை என்ன?

ப: நாங்கள் அரசியலில் நாணயத்தைக் கடைப்பிடிப்பவர்கள். எழுதி வைத்துக் கொள்ளுங்கள். எந்தக் கால கட்டத்திலும் காங்கிரஸிற்கு எங்கள் கட்சி தோள் கொடுக்காது. இன்னும் சொல்லப் போனால் தேர்தலுக்குப் பின்பு யாருக்கும் பெரும்பான்மை கிடைக்காத நிலையில் எந்த எதிர்க் கட்சியும், காங்கிரஸுக்கு உதவக் கூடாது. பணம் விளையாடுவதை அனுமதிக்கவே கூடாது. இதனால் யாரும் ஆட்சி அமைக்க முடியாமல் போய் மறுபடி ஒரு பொதுத் தேர்தல் வந்தாலும் பரவாயில்லை. மேற்கண்ட முறையில் ஒரு பிரகடனத்தை இப்போதே எதிர்க் கட்சிகள் செய்வது நல்லது என்பது என் அபிப்பிராயம்!

**— நமது நிருபர்** படங்கள்: ராஜன்

**அட்டை வண்ணப்படங்கள்: சுபர், யோகா. ராஜ்மோகன் காந்தி படம் உதவி: இந்தியன் எக்ஸ்பிரஸ்.**







— எஸ். குருமூர்த்தி

**A Memorable Musical Event**

From

**CBS**

# *Matunga Sisters*

In A Carnatic Music Recital



Shanmukhananda Hall

Friday, November 24, 1989

7.30 P.M.

Tickets Rs 15, 10

# சுஜாதா

எழுதும்

க்ரைம்

தொடர்கதை

# சுபமங்களா

சுபமங்களா

8, முரேஸ் கேட் ரோடு,

ஆழ்வார்பேட்டை,

சென்னை - 600 018


மக்கள்
வாக்குரிமை
எம் பொண்ணை உங்க பையனுக்குக் கட்டிக் கிட்டீங்கன்னா தங்கம் வைர நகைகள்.... வரதட்சணை, சொத்து எல்லாம் வாரிக் கொடுப்பேன். பையன் வீட்டோட மாப்பிள்ளை!
பணபலம்,
இ.காங்கிரஸ்


இவர் பெயர் தான் ராஜீவ்! நேருவின் பேரன்.. இந்திராவின் மகன்! இந்நாட்டின் பிரதமர்! இ.காங்கிரஸ் தலைவர்! என்னை நம்பி தைரியமா நேர்ல்லே நிற்கிறார். நான் சொல்வதைக் கேட்டு இவருக்கே வாக்களிக்க வேண்டுகிறேன்!


பார்லிமெண்ட் எலெக்ஷ முடிஞ்சுப் பின்னாலே தி.மு.க. அரசு டிஸ்மிஸ் நிச்சயம்!
நான் சொல்றேன்.. எலெக்ஷ முடிஞ்சப் பின் உங்க அரசு டிஸ்மிஸ் ஆகாது!
சரி தான்யா.. எலெக்ஷனே ஜெயிச்சிட்ட மாதிரி பேசுறீங்களே!
மக்கள்



# கல்கி

1989 நவம்பர் 19
மலர் 48 இதழ் 16
சுக்ல கார்த்திகை 4



## பணநாயகத்தை முறியடிப்போம்!

ரொம்பத்தான் குழம்பிப் போயிருக்கிறார் ராஜீவ் காந்தி! எதிர்க்கட்சித் தலைவர்கள் பேச்சை டி.வி. சென்ஸார் செய்ய, டி.வி. பிரசாரமே தங்களுக்கு வேண்டாம் என அவர்கள் பகிஷ்கரிக்க நேர்ந்திருக்கிற இவ் வேளையில், காங்கிரஸ் தேர்தல் அறிக்கை, டி.வி., ரேடியோவைத் தனி கார்ப்பரேஷன் ஆக்குவதாக உறுதியளிக்கிறது! இலங்கைப் பிரச்னையில் ஆரம்பத்திலிருந்தே மத்திய அரசுக்கு மாறுபட்டுப் பேசி வந்துள்ள தி.மு.க.வுக்கு, அப் பிரச்னையில் ஒத்துழைப்புத் தந்ததற்காக ராஜீவ் நன்றி தெரிவிக்கிறார்! அவதூறுச் சட்டம் என்ற பெயரில் பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டுப் போடப் பார்த்த ராஜீவ், தேர்தல் அறிக்கையில் பத்திரிகைச் சுதந்திரம் பாதுகாக்கப்படும் என்கிறார்! ஆட்சி மொழி, பஞ்சாப் பிரச்னை ஆகியவற்றில் தி.மு.க. தேர்தல் அறிக்கையும் சரி, தேசிய முன்னணியின் அறிக்கையும் சரி, தெளிவாக இருக்கும் போது, ராஜீவ், இவ் விஷயங்கள் பற்றி அந்த அறிக்கைகளில் ஒன்றுமேயில்லை என்று கூறி, குட்டை குழப்பி, சேறு பூசிக் கொள்கிறார்! இவற்றையும் இவை போன்ற வேறு பல முரண்பாடுகளையும் தேர்தல் ஜுரம் அதிகமானதன் விளைவான பிதற்றல் என்று ஒதுக்கி விடலாம். ஆனால் பணபலத்தால் இந்த நாட்டையே விலைக்கு வாங்கி விடலாம் என்று எண்ணுகிற அவருடைய மமதையை, அத்தனை சுலபமாக ஒதுக்கி விட முடியாது. அது நமக்கே பேராபத்தாகும்.

நாட்டில் எங்கு பார்த்தாலும் ஜீப்கள் அணிவகுத்துச் செல்கின்றன. மாவட்டத்துக்கு ஒரு ஜீப்! தேர்தல் முடிந்த பிறகு அதனை மாவட்ட காங்கிரஸ் கமிட்டி தலைவர் தாமே வைத்துக் கொள்ளலாம்! தவிர, வி. ஐ. பி. தொகுதிகளில் இருபது முப்பது என்று ஜீப்கள் விரைகின்றன! மொத்தம் எத்தனை ஜீப்கள்? இவற்றை வாங்கவும், பெட்ரோல், டீசல் ஊற்றவும் ஆகும் செலவு என்ன? தமிழகத்துக்கு மட்டும் முந்நூறு வீடியோ காஸெட்டுகள் என்றால் நாடு தழுவிய முறையில் எவ்வளவு? அவற்றைக் காட்ட வீடியோ டெக்குகள், கலர் டி.வி.க்கள் என்று செலவு எத்தனை? தமிழகத்துக்கு மட்டும் 3000 ஆடியோ டேப்புகள் என்றால், தேசம் முழுவதற்கும் டேப்புகளுக்கும் ரிகார்டர்களுக்கும் ஆகும் செலவு? யோசியுங்கள்! பாரத நாட்டின் நாளிதழ்கள் அனைத்திலும் ஒவ்வொரு நாளும் முழுப் பக்க விளம்பரங்கள்! கட்டுக்கட்டாக ஆளுயர போஸ்டர்கள்! இத்தனையும் போதாதென்று பெட்டி பெட்டியாகக் கரன்ஸி நோட்டுகள் விநியோகமாகின்றன! மொத்தத்தில் காங்கிரஸ் ஆயிரம் கோடி வரை செலவிடும் என்று ஒரு மதிப்பீடு! எங்கிருந்து வருகிறது பணம்?

அதிகார துஷ்பிரயோகம் செய்து அரசு கஜானாவை ஓரளவு கரைக்கலாம். பீரங்கி பேரம், நீர்மூழ்கி பேரம் இவற்றில் அயல் நாடுகளில் சேமித்துள்ள கமிஷன் தொகைகளைக் கொண்டு வரலாம். இன்னும்? தொழிலதிபர்களிடம் நன்கொடைகளாகப் பெறலாம். இதற்காகவேதான் ''மெகா இஷ்யூ'' என்ற பெயரில், பல பெரிய நிறுவனங்கள் டிபென்சர்களை வெளியிட்டுப் பணம் பண்ண அனுமதிக்கப்பட்டதாகப் பேசப்படுகிறது. இப்படி பணத்தைக் கொட்டி வோட்டை விலைக்கு வாங்குவதும், பணத்தாசை கொண்ட ஆமாம் சாமிகளைக் கொண்டு நாடாளுமன்றத்தை நிரப்புவதுமா ஜனநாயகம்?

கோடிக்கணக்கில் பணத்தை வாரி இறைப்பதன் பின்விளைவு என்ன? பணவீக்கம், விலைவாசி உயர்வு. அதனால் அவதிப்படப் போவது ராஜீவும் அவரது எம்.பி.க்களும் அல்ல; நீங்களும் நானும்தான்!

இந்தப் பணமெல்லாம் யாருடையது? அதிகார துஷ்பிரயோகத்தில் அரசு கஜானா கரைந்தால், அது நம்முடைய பணம். ராணுவத் தளவாடங்கள் வாங்கியதில் கமிஷன் அடித்திருந்தால், அதுவும் மக்களுடைய பணம். தொழிலதிபர்களிடம் நன்கொடை பெற்றிருந்தால், அதுவும் கடைசியில் நம் தலையில்தான் விடியும்! தொழிலதிபர்கள் சும்மா இருக்க மாட்டார்கள். இந்த நன்கொடை நஷ்டத்தை ஈடுகட்ட, ராஜீவ் பதவிக்கு வந்ததும் சலுகை பெற்று, விலைவாசிகளை உயர்த்தி விடுவார்கள்! ஆக மொத்தம், வெல்லப் பிள்ளையாரிடமே வெல்லம் கிள்ளி, அவருக்கே நைவேத்தியம் செய்வது போல், நம் பணத்தையே நம்மை ஏமாற்றிப் பறித்துப் பிறகு, நம்மிடமே விநியோகித்து ஆசை காட்டி வோட்டுக் கேட்கும் பயங்கர மோசடி இது! கோடிக்கணக்கில் செலவாவது ராஜீவ் காந்தியின் பணமோ, காங்கிரஸின் பணமோ அல்ல. நம் பணம்!

அடி மட்டத்தில்தான் அதிகபட்ச ஊழலாம்! அதனை விரட்டி அடிப்பார்களாம்! காங்கிரஸ் கட்சியின் தேர்தல் அறிக்கை கூறுகிறது! ''உயர் மட்டத் திமிங்கில ஊழல்தான் ஐயா, அடிமட்டப் பெருச்சாளி ஊழலுக்குத் துணிவு தருகிறது'' என்று பதில் கூறும் விதமாக, நாம், நமது வோட்டுக்களைப் பயன்படுத்துவோம். காங்கிரஸுக்குப் பாடம் கற்பிப்போம். அதன் பணநாயகப் போக்குக்கு மரண அடி கொடுப்போம்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

KVB

# உங்கள் சேமிப்பு ஒரே சமயத்தில் 2 இடங்களில் இருக்க முடியும்!



உங்களிடம்—உங்களுக்கு பணம் தேவைப்படும் போதெல்லாம்



KVBயிடம் —எப்பொழுதும் வட்டி பெற்றுக் கொண்டு

# விஷ்ராந்தி டிபாஸிட் திட்டம்

கரூர் வைஸ்யா வங்கியின் விஷ்ராந்தி டிபாஸிட் திட்டம், உங்கள் முதலீட்டிற்கு வங்கியின் பாதுகாப்புடன் உயர் விகித வட்டி வழங்குகிறது; அதேசமயம், அதனை "பணமாக மாற்றும்" வசதியையும் வைத்திருக்கிறது. அதாவது, விஷ்ராந்தி என்ற பெயருக்கேற்ப தேவைப்படும் போது உங்கள் பணத்தை பெற்றிடலாம் என்ற மனநிம்மதியுடன் நீங்கள் முதலீடு செய்யலாம்.

**உயர் வட்டி விகிதம்**

சாதாரணவொரு சேமிப்பு கணக்கு போலில்லாது, விஷ்ராந்தி டிபாஸிட் திட்டத்தின் கீழ் உங்களது முதலீட்டிற்கு ஆண்டுக்கு 10% வட்டி கிடைக்கிறது!

**"பணமாக மாற்றுதல்" எளிது**

எப்போது உங்களுக்கு பணம் தேவைப்படுகிறதோ அப்போது டிபாஸிட் தொகையில் 75% வரை திரும்பியெடுக்கலாம்! அதுவும், இவ்வாறு திரும்பப் பெற்ற தொகைக்கு, மூன்று மாதங்களுக்கு ஒருமுறை, டிபாஸிட் வட்டி விகிதத்திற்கு மேலாக கூடுதல் 2% வட்டி செலுத்தினால் போதும்.

**எளிதான, சிக்கல்கள் இல்லாத திட்டம்**

டிபாஸிட் செய்யும்போதும் சரி, அதிலிருந்து பணம் திரும்பப் பெறும்போதும் சரி, நேரத்தை வீணாக்கும் தொல்லைகள் எதுவுமில்லை. இப்போது முதலீடு செய்து, உங்கள் காசோலை (செக்) புத்தகத்தை பெற்றுக் கொள்ளுங்கள்—அதன்மூலம் தேவைப்படும்போது உங்கள் பணத்தை திரும்பப்பெறலாம்!

**இம்மாதிரி ஒரு திட்டத்தையல்லவா நீங்கள் எதிர்பார்த்திருந்தீர்கள்?**

வாருங்கள், மேல் விவரங்களை எங்களை அணுகிப் பெறுங்கள்.



## கரூர் வைஸ்யா பாங்க்

கரூர் - 639 002.

**பவள விழா ஆண்டு நோக்கி வெற்றி நடை...**

B.பாஸ்கரன்

Anugrah 382/89 Tam

# சிறுமுகை தயாரிக்கும் சினிமா சேலைகள்!



சேலை வியாபாரம்: காஞ்சிப்பட்டின் தரம்.... ஆனால்...

●● திப்புசுல்தான் தன் பரிவாரங்களுடன் டாணாயக்கன் கோட்டை என்னும் இடத்துக்குச் செல்லும் போது, சிறுமுகாம் அமைத்துத் தங்கிய இடம்தான் சிறுமுகை. பேச்சு வழக்கில் முகாம், 'முகை'யாகி விட்டது. மேட்டுப்பாளையம் அருகே உள்ளது சிறுமுகை.

●● இந்த வட்டாரத்தில் ரொம்பப் பிரபலமான விஷயம் சிறுமுகையில் உள்ள சௌத் இந்தியா விஸ்கோஸ் தொழிற்சாலை. இங்கே தயாரிக்கப்படும் செயற்கை இழைகளுக்கு இந்தியா முழுவதும் நல்ல டிமாண்ட் இருக்கிறது.

●● சிறுமுகை, பட்டு மற்றும் கைத்தறி நெசவுக்கும் பெயர் பெற்ற இடம். ஆனால் ஆரணி, காஞ்சி போல பிரபலமடையவில்லை. நூற்றுக்கணக்கான குடும்பங்கள் நெசவை நம்பியுள்ளன. பட்டுச் சேலை வியாபாரி மாரப்பன் சொன்னார்: ''தரத்தைப் பொருத்தவரை, காஞ்சிபுரம், ஆரணி, தர்மாவரம், திருபுவனம் இவற்றுக்குக் குறைந்ததில்லை-சிறுமுகை சேலைகள். அசல் பட்டுதான். ஆனால் இங்கே, சேலைகளில் உள்ள சாயத்துக்கும், ஜரிகைக்கும் உத்திரவாதம் தருவதில்லை. இங்கே தயாரிக்கப்படும் சேலைகளை, காஞ்சிபுரம், ஆரணி என்று சொல்லி, கோவையின் பிரபல சேலைக் கடைகளில் கூட விற்பனை செய்கிறார்கள். ஒரிஜினல்



மாரப்பன்: சினிமாவுக்குச் சேலைகள் இலவசம்!

நூலகர் பத்மாவதி: அதிசயமான ஈடுபாடு!



காஞ்சிபுரம் சேலைகள் மட்டும்தான் விற்பனை செய்வது என்றால் மொத்தத் தேவையில் கால் பங்கைக் கூட சமாளிக்க முடியாது! ஆரம்ப காலத்தில், இங்கேயிருந்து மைசூர் கொண்டு போய்க் கொடுப்பேன். அவை, மைசூர் லேபிலில், மறுபடி கோவைக்கே வரும்!''

●● மாரப்பனின் கடையின் உள்ளே ஏகப்பட்ட சினிமா ஸ்டில்கள். ''இந்த நடிகைகள் (அம்பிகா, நிஷாந்தி, மாதுரி) உடுத்தியிருப்பது நம்ம கடை சேலைகள்தான். டைரக்டர் சிறுமுகை ரவி, நம்ம ஊர்க்காரர். அவர் மூலமா திரையுலகத்தினர் அறிமுகம் கிடைத்தது. ஊட்டிக்கு ஷூட்டிங்கிற்கு வரும் நடிகைகள் நம்ம கடைக்குச் சேலை எடுக்க வருவாங்க'' என்றார். சினிமாக்காரர்கள், ஷூட்டிங்கிற்காக எவ்வளவு பட்டுச் சேலைகள் கேட்டாலும், தயங்காமல் கொடுத்து விடுகிறார் மாரப்பன். பணமும் வாங்கிக் கொள்ளுவதில்லை. படத்தில் கடையின் பெயர் போட்டால் போதும் இவருக்கு!

●● சிறுமுகையில், சில மாதங்களுக்கு முன் மிகவும் பரிதாபமான நிலைமையில் இருந்தது கிளை நூலகம். இன்று பார்க்கப் பளிச்சென்று விளங்குகிறது. புதுமனை (வாடகைதான்) புகுந்து, நல்ல முறையில் இயங்கி வருகிறது. நூலகர் பத்மாவதி முயற்சி எடுத்துக் கொண்டு, ஊர்ப் பிரமுகர்களை அணுக, அவர்கள் நூலகத்துக்கு வேண்டிய மேஜை, நாற்காலி, அலமாரிகள், மின்விசிறி போன்ற பலவற்றை (மதிப்பு ரூபாய் பத்தாயிரம்) நன்கொடையாகவே அளித்து விட்டனர்! பத்தாயிரம் புத்தகங்களுக்கு மேல் உள்ளன. இந்த நூலகத்திற்கு வாசகர் வட்டம் அமைத்துச் சிறப்பாய்ப் பணியாற்றி வருகிறார் சிறுமுகை ஜி. கதிரேசன். சென்னை எக்ஸ்பிரஸ் எஸ்டேட்டில், முதல் துணுக்கு எழுத்தாளர் மாநாட்டை நடத்திய பெருமையும் இவருக்கு உண்டு.

கட்டுரை: **எஸ். சந்திரமௌலி**

படங்கள்: **ஸ்ரீஹரி**

---

# புதிய தலைமைக்கு ஒரு பூப்பந்தல்



● ஆணிவேரென்று நினைத்ததே
ஒட்டுண்ணியாய் மாறிவிட்டால்,

சல்லிகளும்,
சலித்துக் கொள்வது,
நியாயம்தானே!
இனி,
மரத்தைக் காக்க
ஊசலாடும் விழுதுகளையேனும்
ஒன்று சேர்த்து
மண்ணில்
ஊன்ற வைக்க வேண்டாமா?

● திரையில் ஓவியம்
வரைய வேண்டிய கை
அதைக்
கறைப்படுத்துவதிலேயே
கவனம் செலுத்தினால்,
தலை(லை)விடுவதைத் தவிர
வேறு வழி?
கால்களே தூரிகையேந்தக்
காத்திருக்கின்றன!
வா! புதிய தலைமையே!

● நீலம் பூத்த ரோஜாவுக்கு
இப்போது தேவை:
வண்ண மலர்த் தொட்டிகளல்ல!
எருவும் உரமும்தான்!
எழுக, புதிய தலைமையே!

—நிர்மலா சுரேஷ்

# இப்போது, விம்
# ஏறக்குறைய பாதிவிலையிலே...




## பேரச் சலுகை
## அளிக்கும் (கேரிபேக்) தூக்குப் பை.

இப்போது ஏறக்குறைய பாதி விலையில் கிடைக்கிறது நீங்கள் விரும்பும் விம்.... பணமிச்சம் தரும் (கேரி பேக்) தூக்குப் பைகளிலே!

ஒப்பிட்டுப் பாருங்களேன்

| | |
|---|---|
| பேக் | 100 கிராம் விலை |
| 500 கிராம் கேனிஸ்டர் | 135 பைசா |
| 2.5 கிலோ கேரிபேக் பை | 75 பைசா |




உபயோகிப்பிலேயோ மேலும் சிக்கன லாபம் கிடைக்கிறது இதில் உங்களுக்கு. ஒரு துளியளவு விம் உயர்வனபோலும் நுரை கொழித்து பிசுக்குகளை விலக்க என வெளிப்படுகிறது கணக்குக்காக.... அதிகப் பாத்திரங்களைத் துலக்குகிறது ஒளிமிலுக்க.

விரைந்தோடி இன்றே வாங்குவீர் புதிய விம் கேரிபேக் உங்கள் தேவைக்குகந்த அளவிலே (தேர்ந்தெடுக்க கிடைப்பவை 500 கிராம், 1 கிலோ, அல்லது 2.5 கிலோ பேக்குகள்)

## ஒரு துளி விம் தரும் துலக்கம் அதிகப் பாத்திரங்கள் ஒளிமினுக்கும்

LINTAS VG 482 2213 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

# வெல்லமை தாரரையோ..?

④

"வணக்கம் சார். ஐ அம் வந்தனா..." குவித்த விரல்களில் சுத்தமாக வெட்டப் பட்ட நகங்களைப் பார்த்தான் அரவிந்த்.

காட்டன் சேலை. ஒற்றைப் பின்னல். சிதைக்கப்படாத புருவங்கள். வர்ணம் தீட்டப்படாத, தீட்ட அவசியமில்லாத உதடு கள். கழுவின தரையாகக் கன்னங்கள்.

அவளைத் தீர்க்கமாகக் கவனிப்பதை உடனே நிறுத்தி, ''வணக்கம். உக்காருங்க. இது என் ஃப்ரெண்ட் கிருஷ்ணன். ஷேர் ப்ரோக்கர்'' என்றான் அரவிந்த்.

''ஹலோ!'' என்றான் கிருஷ்ணன்.

வந்தனா பதிலுக்குச் சொல்லி விட்டு, ''ஆரம்பிக்கலாமா சார்?'' என்று தன் ஹேண்ட் பேகிலிருந்து டேப் ரெக்கார்டர் எடுத்து மேஜை மேல் வைத்து, ஹேண்ட் மைக்கை அதனுடன் தொடர்புபடுத்திக் கொண்டிருக்கையில், கிருஷ்ணன் அரவிந் தைப் பார்த்துப் பொடி போடுபவன் போல கையில் அபிநயம் காட்டி, ''நூத்துக்குத் தொண்ணூறு'' என்றான். அரவிந்த் பதறி விட...

''ம்?'' என்று திரும்பினாள் வந்தனா.

''நூத்துக்குத் தொண்ணூறு பேர் அப்பா வோட தொழிலை இப்ட செய்யறதில்லை. செஞ்சாலும் சரியா செய்றதில்லை. ஆனா அரவிந்த் அவங்க அப்பா ஆரம்பிச்ச இந்தத் தொழிலைப் பத்து மடங்கு பெரிசாக்கியிருக் கான்னு சொல்ல வந்தேன்...'' என்றான் கிருஷ்ணன் அலட்சியமாக.

''அப்படியா?'' என்றவள், ''பத்திரிகை பேட்டின்னா உங்க கருத்தையும் சேர்த்து எழுதலாம். இது ரேடியோ பேட்டிங்கறதால நான் கேள்வி கேக்கறப்போ நீங்க அவசரப் பட்டு குறுக்கே எதுவும் சொல்லிடாதீங்க. அப்புறம் மறுபடி ரெக்கார்ட் பண்ண வேண்டியதா இருக்கும். ஆரம்பிக்கலாமா சார்?'' என்றாள் அரவிந்தைப் பார்த்து.

கிருஷ்ணன் லேசாக முகம் மாறினான். கொஞ்சம் ராங்கி பிடித்தவளாய் இருப்பாள் போலிருக்கிறதே. இவ்வளவு நாசூக்காக இன்சல்ட் செய்கிறாளே.

''கேட்கலாம் மேடம்'' என்றான் அரவிந்த்.

''ஒரு பத்தே நிமிஷத்துல முடிச்சுக்க றேன். கூடுமான வரைக்கும் இங்கிலீஷ் கலக்காம பேசுங்க. வித் யுவர் பர்மிஷன், ஒரு பத்து நிமிஷம் உங்களுக்குக் 'கால்' எதுவும் வராம இருந்தா நல்லது'' என்று வந்தனாவே டெலிபோனின் ரிசீவரை எடுத் துத் தனியாகக் கிடத்தினாள்.

''உங்க நிறுவனம் ஆரம்பிச்சு எத்தனை வருஷம் ஆச்சு?'' என்று கேட்டு விட்டு மைக்கை அவன் முகமருகே நீட்டிப் பிடித் தாள் வந்தனா.

''இருபது வருஷம் ஆச்சுங்க.''

''நீங்க நிர்வாகப் பொறுப்பு எடுத்துக் கிட்டு எத்தனை வருஷம் ஆச்சு?''

''ஒன்பது வருஷம் ஆச்சு...''

''உங்க நிறுவனத்தோட வெற்றிகரமான செயல்பாட்டுக்குக் காரணம் என்னன்னு சொல்வீங்க...?''

''எங்க நிறுவனம் தயாரிக்கிற பொருள் களோட தரம் ஒரு காரணம். கிரைண்டர், மிக்ஸி, குக்கர்ன்னு வீட்டுக்குத் தேவைப் படற எல்லாமும் தயாரிக்கிறோம். எங்க விளம்பரங்கள்ல மிகை இருக்காது. ஒரு நிறுவனத்தோட வெற்றியில் விளம்பரத் துக்கு முக்கிய பங்கு உண்டு. அதுக்கான செலவுகளை நான் குறைக்கிறதே இல்லை. இதையெல்லாம் கம்பெனியோட பிரபலத் துக்குக் காரணமா சொல்லலாம். ஒரு தொழிலதிபரா இருக்கிறதால பல நிகழ்ச்சி களுக்கு என்னைக் கூப்பிடறாங்க.''

''சமூக நிகழ்ச்சிகள்ல நீங்க நிறைய கலந் துக்கிறீங்க... சமூகத்துக்காக நீங்க ஏதாவது செய்து வர்றீங்களா?''

''எங்கப்பா பேரால ஒரு அறக் கட்டளை துவங்கி மூணு வருஷமா சிறந்த இலக்கிய படைப்புக்குப் பரிசு தந்துக்கிட்டிருக்கேன். நூறு மாணவர்களுக்கான கல்வி செலவு களைச் செய்து வர்றேன்.''

''நமது நாடு தொழில் துறையில வேகமா முன்னேற — ஒரு வெற்றிகரமான தொழி லதிபர்ங்கிற முறையில உங்களோட ஆலோ சனைகள் என்ன?''

''ஆலோசனை சொல்ற அளவுக்கு நான் பெரிய ஆள் இல்லை. ஆனா என் கருத்தைச் சொல்லலாம்னு நினைக்கிறேன். தொழில்ல ஆர்வமுள்ள நபர்களுக்குச் சரியான உதவி கள் கிடைக்கிறதில்லை. அரசியல் செல் வாக்கு உள்ளவங்களுக்கு ஏராளமான சலுகைகள் தரப்படுது. அடுத்து... கடற் கரையோரத்தில உப்பு, மீன் சம்பந்தப்பட்ட தொழில் செய்றது முறை. அது மாதிரி இந்தி யாவோட பலம் எதுவோ அதை அடிப் படையா கொண்ட தொழில்களைப் பெருக் கணும். இந்தியாவோட பலம் மக்கள் தொகை. இங்கே உழைக்கிற மனித பலத்தை அதிகமா பயன்படுத்தறதுதான் முறை. கம்ப் யூட்டரை எல்லா இடங்கள்லயும் நியமிக்

பட்டுக்கோட்டை பிரபாகர்

கிற சமீப சிந்தனைகள் ரொம்ப தப்பானது.''

''அப்படின்னா நீங்க கம்ப்யூட்டரை எதிர்க்கறீங்களா?''

''நிச்சயமா இல்லை. கம்ப்யூட்டருக்கு நான் எதிரி இல்லை. ஆனா அதை எங்கெங்கே பயன்படுத்தணுமோ அங்கே மட்டும்தான் பயன்படுத்தணும். பம்பாய்ல சரக்குகளை லோட் செய்யவும், அன்லோட் செய்யவும் கம்ப்யூட்டர் டெக்னாலஜியைப் பயன்படுத்தறது தொழிலதிபர்களுக்கு ரொம்ப சாதகம்தான். ஆனா தொழிலாளர்களுக்கு ரொம்ப பாதகம்.''

''நீங்க தொழில் நடத்தறதோட நோக்கம் என்ன?''

''நிச்சயமா லாபம் மட்டுமில்லை. நிறையப் பேருக்கு வேலை வாய்ப்புத் தர முடியுது. ஒரு பெரிய நிறுவனத்தை நிர்வகிக்கிறதே ஒரு சவாலான வேலை. தினம் புதுப் புது பிரச்னைகளைச் சந்திக்கணும். பிரச்னைகளைத் தீர்த்து, வெற்றிகரமா நடத்தறப்போ கிடைக்கிற நிறைவு... ...ஆத்ம திருப்தி...''

''வானொலி நேயர்களுக்காக இந்த கேள்விகளுக்குப் பதில் சொன்னதுக்கு எங்கள் நன்றியைத் தெரிவிச்சிக்கிறோம்.''

''எனக்கு இந்த வாய்ப்பு கொடுத்ததுக்கு நானும் நன்றி தெரிவிச்சுக்கிறேன்'' என்றான் அரவிந்த்.

வந்தனா டேப்பை அணைத்ததும்..

கிருஷ்ணன் ஒருமுறை இருமி விட்டு, ''ரொம்ப நேரமா கட்டுப்படுத்தி வச்சிருந்தேன். ஏன் மேடம், இந்த பேட்டி மூன்றில் ஒரு பங்காகச் சுருக்கி ஒலிபரப்பப்படுமா?'' என்றான்.

''ஏன் அப்படிக் கேக்கறீங்க?''

''இல்லை. அரசியல் செல்வாக்கு.. சலுகைன்னு கொஞ்சம் சொன்னான். ரேடியோல இவ்வளவு சுதந்திரமா விட்டுருவாங்களா?''

''இவர் யார் பேரையும் குறிப்பிட்டுச் சொல்லலை. அதனால அநேகமா எடிட் ஆக வாய்ப்பில்லை'' என்றாள் வந்தனா.

''நீங்க ஏ.ஐ.ஆர்ல வேலை செய்யறீங்களா?'' என்றான் அரவிந்த்.

''பார்ட் டைம். நீங்க ஃபோன் செஞ்சீங்களே குப்தா சர்ஜிக்கல் எக்விப்மெண்ட்ஸ், அங்கே பார்ட் டைம் க்ளார்க் வேலை பார்க்கறேன்'' என்று தன் கடையின் விலாச அட்டையைக் கைப் பையில் இருந்து எடுத்துக் கொடுத்த வந்தனா, எழுந்து கொண்டாள்.

''என்னைக்கு ஒலிபரப்பாகுதுன்னு உங்களுக்கு ஃபோன் செஞ்சு சொல்றேன்... ஓ, ஸாரி...'' என்று தனியாய்க் கிடத்தின ரிசீவரை எடுத்துச் சரியாய் வைத்தாள்.

''ஒன் மினிட் இருங்க மேடம். ஏதாச்சும் சாப்பிட்டுட்டுப் போங்க.'' அரவிந்த் இண்டர்காம் எடுத்து, ''சொல்லுங்க, காபியா, கூல்ட்ரிங்கா?'' என்று அவளைப் பார்த்தான்.





# காலத்தின் அருமை தெரிந்த கடிகாரம்

''காப்பி'' என்று மீண்டும் அமர்ந்து அந்த அறையை நோட்டம் விட்டாள் வந்தனா.

ஒரு தூசு இல்லாமல், ஒரு அழுக்கு இல்லாமல் வசீகரமான வர்ணங்கள் பூசின சுவர்களுடன், விலையுயர்ந்த மேஜை, நாற்காலிகளுடன் இருந்தது. ஜரிகை மாலையுடன் நின்ற அரவிந்தின் அப்பா படத்தைப் பார்த்தாள்.

''எங்கப்பா, இந்த நிறுவனத்தை ஆரம்பிச்சவர்'' என்றான் அரவிந்த்.

''ஆனா அப்பாவோட குணம் ஒண்ணு கூட பிள்ளைக்கு இல்லைங்க'' என்ற கிருஷ்ணன், ''சம்பாதிச்ச பணத்தில பாதியை விஸ்கியிலும், குதிரையிலும் விட்டாருங்க. இவன் என்னடான்னா ஒரு சிகரெட் பிடிக்க மாட்டேங்கறான். வரப் போற பொண்டாட்டிதான் இவனை மாத்தணும்.''

''கிருஷ்ணா, நீ யாரையோ பார்க்கணும்னு சொன்னியே?'' என்று நெளிந்தான் அரவிந்த் சங்கடமாக.

''அதெல்லாம் யாரையும் பார்க்க வேண்டியதில்லை. இப்படியெல்லாம் சொல்லி என்னை வெளில போகச் சொல்ல முடியாது. 'அப்பா கிருஷ்ணா, நான் இவங்ககிட்டே ரெண்டு வார்த்தை தனியாப் பேசணும். வெளில போறியா?'ன்னு நயமா கேட்டா.. நான் போய்டுவேன். போறேன்...'' என்று கிருஷ்ணன் எழுந்து அறையை விட்டுச் சென்று விட...

''மேடம்... தப்பா எடுத்துக்காதீங்க. அவன் எப்பவுமே கொஞ்சம் கரடு முரடா உளறிடுவான்'' என்ற அரவிந்த் உள்ளே கொண்டு வந்து வைக்கப்பட்ட காப்பியை, ''எடுத்துக்கங்க'' என்று அவளிடம் நீட்டி விட்டு, ''சீனிவாசன்கிட்டே சொல்லி, நம்ம கம்பெனி காம்ப்ளிமெண்ட் பென் செட் ஒண்ணு வாங்கிட்டு வா...'' என்றான் ப்யூனிடம்.

வந்தனாவுக்குச் சங்கடமாக இருந்தது.

பென் செட் அட்டைப் பெட்டியைப்

பிரிட்டிஷ் நாடாளுமன்றக் கட்டிடத்தின் உச்சி முகப்பை அலங்கரிக்கும் இந்த Big Ben கடிகாரம், பதினைந்தரை அடி நீளம்; நாலாரை அடி அகலம்! எடை ஐந்து டன்! 1854 இல் கடிகாரம் தயாரானது. பாராளுமன்றப் புதுக் கட்டடம் கட்டி முடியும் வரை ஐந்து வருடங்கள் ஒர்க் ஷாப்பில் காத்திருந்தது! கடிகாரத்தின் கண்டாமணி தனியாகத் தயாரிக்கப்பட்டது. பதின்மூன்று டன் எடையுள்ள இந்த மணியைப் பதினாறு குதிரைகள் பூட்டிய வண்டியில் ஏற்றிக் கொண்டு வந்தார்கள்!

உலகப் போரின் போது 1941 இல் விமான குண்டு வீச்சில் பாதிப்புக்குள்ளாகி, பழுது பார்க்கப்பட்ட பிறகும் கூட இந்தக் கடிகாரம் ஒன்றரை வினாடி தான் முன்பின்னாக ஓடுகிறது. காலத்தின் அருமை அந்த ஊர் கடிகாரத்துக்குக் கூடத் தெரிந்திருக்கிறது!

தகவல் நன்றி: பிரிட்டிஷ் கவுன்சில் நூலகம்.

பியூன் கொண்டு வந்து கொடுத்ததும், "இந்தாங்க மேடம். எங்க கம்பெனி நினைவா வச்சிக்கங்க" என்று நீட்டினான் அரவிந்த்.

"இல்லை. வேணாம் சார். பரவாயில்லை..."

"சும்மா வச்சிக்கங்க. இதைக் கொடுக்கறதால உங்ககிட்டேயிருந்து எந்தத் தப்பான சலுகையும் நான் எதிர்பார்க்க மாட்டேன். வாங்கிக்கங்க."

மறுபடி மறுக்க முடியாமல் பெற்றுக் கொண்ட வந்தனா எழுந்து, கைகூப்பி விடைபெற்று வெளியில் சென்றதும்.. சிகரெட் ஊதிக் கொண்டே உள்ளே வந்த கிருஷ்ணன், "நான் போட்ட மார்க் சரியா?" என்றான்.

அவன் கேள்வியைக் காதில் வாங்காமல், தூரத்தில் நடந்து சென்ற வந்தனாவைக் கண்ணாடி ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தான் அரவிந்த்.

(தொடரும்)

## கல்கி தீபாவளி மலர் '89

* கல்கி தீபாவளி மலர் அட்டைப் படமே தெய்வமணம் கமழ்ந்தது. ஆப்பிரிக்க வனவிலங்குகளின் வண்ணப் படங்கள் கண்களைப் பறித்தன. யானை டாக்டர் கிருஷ்ணமூர்த்தியின் அனுபவங்கள் வெகு சுவை. கோகுலம் பக்கங்கள் சிறுவர்களை மட்டுமல்ல, பெரியவர்களையும் மகிழ்ச்சி அடையச் செய்தன!

ஊத்தங்கரை. பி. கோவிந்தசாமி.

* கல்கி தீபாவளி மலர் கலை மணம் கமழும் வண்ண ஓவியங்களுடன், இன்சுவை நல்கும் இலக்கியப் படைப்புகளுடன் நவரத்தினப் பொக்கிஷமாகத் திகழ்கின்றது.

இந்த மாபெரும் வண்ண மலரில், இதயத்தைக் கவரும் எத்தனை, எத்தனை கதைகள், கட்டுரைகள், கவிதைகள், வண்ணப்படங்கள்! இதில் எதைப் பாராட்டுவது? எதை விடுவது? மகிழ்ச்சியில் திக்குமுக்காடிக் கொண்டிருக்கிறேன்.

முடிகண்டநல்லூர். க. ராஜேந்திரன்.

* உயர்ந்த தரத்துடன், உன்னத படைப்புகளோடு, உள்ளம் கவர் வண்ணங்களோடு, கொள்ளை கொள்ளும் அழகோடு, கோவில் கோபுரமாக விளங்கிய மலரைக் கண்களில் ஒற்றிக் கொண்டேன்!

பெங்களூர் — 21. ப. முனுசாமி.

வழக்கம் போல் படித்துப் பாதுகாக்கும் பொக்கிஷமாகத் திகழ்ந்ததுடன் இவ்விதழ் ஜனரஞ்சனமாகவும் இருந்தது.

குடியாத்தம் — 1. ஏ. உமாசங்கர்.

* 'விக்னம் தீர்க்கும் விநாயகர்', 'உலா வரும் இறைவன்' போன்ற பக்தி பரவசத்தில் ஆழ்த்தும் வண்ணத் தொகுப்புகளுடன், 'இந்திய நடனக் கலைகள்', 'கலை வளர்க்கும் கரங்கள்' போன்ற கலையின் சிறப்பை உணர்த்தும் வண்ணப்படங்கள் — கட்டுரைகள்! அப்புறம் வண்ணக் கவிதை மடல்களும், 'கங்கா ஸ்நானம் ஆச்சா?' என்ற கேமிரா கட்டுரையும் இன்னும் பலவும் வரிசை வரிசையாக வந்து என்னை அசர வைத்து விட்டன.

மங்கைநல்லூர். ஆர். செல்வராணி.



# பாதுகாப்பு.
# நீண்டகால உழைப்பு.
# அதுவே வீலன்.



பாதுகாப்பு : வீலன் ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டரில் மூன்று பாதுகாப்பு அம்சங்கள் உள்ளன : அளவுக்கு அதிகமாக உஷ்ணமடைவதை தவிர்த்திட ஒரு தெர்மோஸ்டேடிக் டெம்பரேச்சர் கண்ட்ரோல், கூடுதலான அழுத்தத்தை உருகித் தடுத்திட ஒரு ஃப்யூஸிபிள் பிளக் மற்றும் ஒரு பிரஷர் ரிலீஸ் வால்வு.

நீண்ட கால உழைப்பு : இதன் விசேஷமான உட்புறக் கலம், பாதுகாப்பான விட்ரஸ் எனாமல் மூலம் பூசப்பட்டுள்ளது. இது துருப்பிடித்தலுக்கு ஒரு ஒப்பற்ற தடுப்பாகும். இத்தொழில்நுட்பம், அமெரிக்காவில் தயாரிக்கப்படும் ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டர்களில் பயன்படுத்தப்பட்டு, வெற்றி பெற்றுள்ளது.

வீலன் ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டர்ஸ் வழங்குவோர், வோல்டாஸ். அவை பாதுகாப்பானவை, நம்பகமானவை, நீடித்துழைப்பவை . . . ஆண்டாண்டுகளுக்கும்.

## வீலன்

ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டர்



CLARION/B/V/128/173 TAM



விற்பனைக்கு விடுப்போர் :
**வோல்டாஸ் லிமிடெட்**
அப்ளையன்ஸஸ் பிஸினஸ் குரூப்
19, ஜே. என். ஹெரிடியா மார்க்,
பலார்ட் எஸ்டேட்,
பம்பாய் 400 038

வோல்டாஸ்

**வீலன்**

நம்பகமான வீட்டுபயோக சாதனங்கள்

# திருப்புமுனை



அரசியல் சூதாடி ஒருவர், 'நீ பலான பெண்ணை லவ் பண்ணிச் சுருட்டிப் போட்டுக்கிட்டா உனக்குக் கார், பங்களா, கை நிறையச் சம்பளம் கிடைக்கும்னு வேலையில்லாப் பட்டதாரியிடம் ஆசை காட்டறது; அந்தப் பெ ண்ணைக் கதாநாயகன் மடக்கறது; அந்தப் பெண்ணின் தந்தையான நேர்மையான அரசியல்வாதியை வெடி வைத்துச் சாகடித்ததாய்ச் சூதாடி அரசியல்வாதி சூழ்ச்சி பண்ணிக் கம்பி எண்ண வைக்கிறது; பட்டதாரியின் காதலியே அதை நம்புவது; ஆபத்பாந்தவர்களாய், ஒழுங்கான காவல் அதிகாரி ஒருத்தரும் முடத் தோழர் ஒருவரும்கைகொடுத்துமோசக்காரர்களைப் பழிவாங்கி... — தேசல் பாதையானாலும் — செமர்த்திக் கதைதான்!

இளமைக்கு ஒரு கார்த்திக். இதிலும் அது ஊர்ஜிதமாகியிருக்கிறது. அடுத்தடுத்துச் சித்ரா மேல் காதல்வலை வீசும் அந்தச் சிலுமிஷம் சூப்பர். பஸ் பயணி, ஐஸ் கிரீம் வியாபாரி, கோயில் குருக்கள், பட்டாணி சுண்டல், ஓட்டல் ஸ்டுவர்ட், கௌண்ட்டர் கிளார்க், பார்க்கிங்மேளாளர்— இப்படிப் பழகும் புதுசுமாய்க் கலந்தடித்து, அந்தந்த வேடத்திலும் பேச்சு, நடிப்புக்குக் கணிசமான மார்க் வாங்கி — தூள்தான். உருக்கத்துக்கு? உயிருக்கு உயிராய் ஒட்டிக் கொண்ட ஜனகராஜின் அநியாயக் கொலை கண்டு அதிர்ந்து ஆத்திர அழுகை வெடிக்கும் போதும் சரி, தன்னை யார் கொலையாளி என்றாலும் காதலி கைவிட மாட்டாள், என்று நம்பிக் கொண்டிருக்கும் போது அவளே கூண்டில் நின்று, தன்னைக் கொலைகாரன் என்று குற்றம் சாட்டியதும் இடிந்து பொடிப் பொடியாகும் போதும்சரி, மனசில் தங்குகிறார்.

இரட்டை வேடம்தான் அர்த்தமில்லாமல் போய் விட்டது. 'அட, என்னைப் போலவே இருக்கியே!' என்ற குறைந்தபட்ச பேச்சுக்குக் கூட அவசியமில்லாத, துப்புரவாய் வேறு ஓர் ஆசாமி அந்தக் காவல் அதிகாரி. வேறு ஒரு நடிகரின் பிழைப்பைப் பறித்துக் கொண்டார் என்றாலும், துப்பாக்கியும்கையுமாய் நிற்கும் சித்ராவை அத்தனை மிடுக்காய் இழுத்துத் தள்ளி முறைத்து, கடுமைக்குள் இதம் காட்டும் அதட்டுப் போட இன்னொருவரால் முடியுமா சார்?

ஜனகராஜ் பட்டை தீட்டியிருக்கிறார். அதிலும் இண்டர்வியூவில் 'அந்தச் சேலைப் பட்டாளத்தின் கேள்விக் கணைகளைக் கன்னாபின்னாவென்று சமாளித்து, 'அப்பாயின்ட்மெண்ட் ஆர்டரா?' என்று பரபரத்து வெற்றிப் புன்னகை பூப்பது சூப்பர்.

முடமான சந்திரசேகர், தன் மனைவியுடனும், சுட்டிப்பிள்ளையுடனும் இவர்களுடன் ஒட்டிக் கொண்டது தனி ட்ராக். சந்திரசேகர் சிவப்புப் பத்திரிகை விற்பனையும் சிவப்புப் பேச்சுமாய்க் கொஞ்சம் காரம் காட்டுகிறார்.

அந்தக் குழந்தை அள்ளிக் கொள்ளலாம் போல் அத்தனை பாந்தம். சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளையாய் அது பேசும் பேச்சு மனத்தில் தேன் தடவுகிறது.

கோட்டும் சூட்டுமாய் வரும் சோமயாஜுலு, காட்சியில் மட்டுமல்ல; மிடுக்குப் பேச்சிலும் அசத்தி விடுகிறார்.

வினு சக்கரவர்த்தியும் அவருக்குப் பக்கபலமாய் வரும் அந்த அகலமுக நந்தகுமாரும் அரசியல் சதிகாரர்களாம். நம்பலாம். சாட்சிக் கூண்டில் நின்று படா சாதுத்தனமா, 'இந்தத் தம்பியை நான் இப்பத்தானே பார்க்கிறேன்!' என்று வினு சொல்லும் போது கார்த்திக்குடன் சேர்ந்து கொண்டு நாமும், 'அட பாவி!' சொல்லத் தோன்றுகிறது.

கார்த்திக்கின் அம்மாவாகப் பழைய பத்மப்ரியாவா! குறைந்தபட்சம் தலைக்காவது வெள்ளையடித்திருக்கப்படாதா? சித்ராவுக்குத் தங்கை மாதிரி தெரிகிறதே!

காமெராக் கோணங்கள் என்பது இதுதான் என்று சொல்கிற ஒளிப்பதிவு.

காஸெட் வாங்கிப் போட்டுக் கேட்கத் தோன்றும் இசை. குறிப்பாக 'இளமை இது...' ரொம்பத்தான் துள்ள வைக்கிறது.

எல்லாம் சரிதான். க்ளைமாக்ஸில் மானாவாரியாய்ச் சொதப்பி விட்டாரே டைரக்டர்!

— பி. எஸ். எஸ்.

# நிழல் தரும் மரங்கள்

போட்டிக் கதை — 12

ஜன்னல் கம்பியில் நெற்றியைப் பதித்து நின்று கொண்டிருந்தேன். தூரத்தில் கரும்பச்சையாய் மலை தெரிந்தது. மலை முகடுகளில் மேகங்களின் கவடுகள் ஏதோ ஓர் ஒப்பந்தத்துக்குக் கட்டுப்பட்டது போல் ஒட்டிக் கொண்டு தெரிந்தன. ஆங்காங்கே இளம்பச்சைப் புல் மூடிய மண்மேடுகள்! அவற்றில் ஒல்லியாய், உயரமாய், கம்பீரமாய் அசைந்து கொண்டிருந்த ஒற்றை மரங்கள்!

நான் எரிச்சலுடன் திரும்பி மேசைக்கு நடந்தேன். இரண்டு வருடங்களுக்கு முன்பு போல் இந்தக் காட்சிகளெல்லாம் சந்தோஷத்தின் மொட்டவிழ்ப்பாய் என் மனப் பரப்பில் சிரிக்கவில்லை. என்னிடமிருந்த பொறுமை எல்லாம் இந்த மலைத்தென்றல் உரசி உரசியே தேய்ந்து போய் விட்டதாக எனக்குத் தோன்றியது.

நாற்காலியில் உட்கார்ந்து, ஊர்வலத்துக்காக நான் எழுதியிருந்த கவிதை வரிகளை முணுமுணுப்பாகப் படித்தேன்.

......
நாங்கள்
சொர்க்கத்துச் சிம்மாசனங்களை
உங்களிடம் கேட்கவில்லை!
ஊழியர் ஆசனங்களைத்தான்
யாசிக்கிறோம்!
ஓ... நவீன பிரம்மாக்களே!
கோரிக்கைகள்
தீர்க்கப்படாதவரை — எங்கள்
போர்க்கொடிகள் பறக்கும்!''

'பெரிய தொந்திகளுடன், எங்கள் கவலைகளையெல்லாம் அலட்சியப்படுத்திவிட்டு நிம்மதியாய்த் தூங்கும் எம்ப்ளாய்மெண்ட் ஆபீஸ்காரர்கள் சில காலம் எங்களுக்காக யோசிக்கட்டும்! எங்களைப் போல் நிம்மதியற்ற தூக்கத்தை அனுபவித்துப் பார்க்கட்டும்!' மகா கோபமாக வந்தது!

எனது பெயருக்குப் பின்னால் எம். காம். என்று போட்டுக் கொள்ள எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிறேன்! எத்தனை நித்திரையில்லாத ராத்திரிகளில், எனது மூளைக்குள் புதிய விதிகளைப் பதிய வைத்துக் கொண்டிருக்கிறேன்! எத்தனை அச்சிடப்பட்ட பக்கங்களை மிச்சம் வைக்காமல் விழிகளால் விழுங்கியிருக்கிறேன்! ஆண்டவனே! இது ஏன் இவர்களுக்குப் புரிவதில்லை?

''ஏன்டாப்பா சேகர்!'' — அப்பா அறைக்குள் வந்தார்.

''என்னப்பா?'' — எழுந்தேன்.

''இன்னைக்குச் சும்மாதானே இருப்பே...? கொஞ்சம் வயக்காட்டுக்கு வாயேன்! களத்துல கதிரடிக்கிறாங்க. எனக்கு ரெண்டு நாளா உடம்பு சரியாயில்ல. தலை கனத்துப் போன மாதிரி இருக்கு. கதிரடிச்சதும் நெல்லை அளந்து மூட்டை கட்டி வைச்சுட்டு வந்துடலாம்... ம்ம்...?'' — கெஞ்சலாகத்தான் கேட்டார்.

என்னுள் கோபம் பிரம்மாண்டமாய் எழுந்தது. 'இவர் மனத்தில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார்? விரல் நுனியில் கால்குலேட்டரைத் தட்டி நான் போட்ட வரவு செலவுக் கணக்கெல்லாம் வெறும் நெல்லை அளக்கத்தான் என்று இவரால் எப்படி நினைக்க முடிகிறது? முழுசாகத் திரும்பி அவருக்கு முதுகு காட்டினேன்.

''இல்லேப்பா! இன்னைக்கு எனக்கு நிறைய வேலை இருக்கு. சப்கலெக்டர் ஆபீஸ் வரை ஓர் ஊர்வலம் போறோம்...''

''அப்ப சரி!'' மாடிப்படிகள் சப்திக்க இறங்கிப் போய் விட்டார்.

இந்த அப்பாவைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் எரிச்சல்தான் வருகிறது. இவருக்கு ஏன் மகனாகப் பிறந்து தொலைத்தோம் என்று, காயங்கள் புதுப்பிக்கப்படும் போது தோன்றும்.

மகனைப் படிக்க வைக்க வேண்டும் என்ற ஆசை மட்டும் இருந்தால் போதுமா? ஒன்று... செக்ரட்டேரியட்டிலோ இல்லை, பெரிய கம்பெனியிலோ யாரையாவது தெரிந்து வைத்திருக்க வேண்டும்! அல்லது... தான் கேட்கும் முப்பதாயிரத்தை யார் யாருக்கெல்லாம் பங்கு வைத்துக் கொடுக்க வேண்டும் என்று ஒவ்வொன்றாக விரல் மடக்கிக் கணக்குச் சொல்பவனுக்குக் கொடுக்கவாவது பணம் சேர்த்து வைத்திருக்க வேண்டும்! இரண்டுமில்லை!

நல்லவேளை...! தினம்தினம் ஐந்து கிலோமீட்டர் வயல்காட்டிற்குச் சைக்கிள் மிதித்ததில், அக்காவுக்கு ஒரு புகுந்த வீட்டையாவது அவரால் வாங்க முடிந்தது.

''சும்மாதானே இருக்கே!'' அவருக்கு எங்கே தெரியும்? எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேன்ஜ் ஆபீஸுக்கு முன்னால் இயங்கும் தனி உலகத்தைப் பற்றி அவருக்கு என்ன தெரியும்?

எத்தனை விதமான சோகங்கள்!

சலாஃஹ்

முகங்களைக் கொண்டு எண்ணி விடலாம்! ரேஸரைப் பார்த்து நிறைய நாளாகிறது என்று சொரசொரப்பாகக் கவலைப்படும் முகங்கள்! சுத்தமாக மழிக்கப்பட்டு வேதனை பூசப்பட்டிருக்கும் முகங்கள்! சிரிக்கின்ற முகங்கள்! சிரிக்கத் தெரியாத முகங்கள்!

ஒட்டு மொத்தமாக ஆசீர்வதிக்கப்பட்டது போல் எல்லாவற்றிலும் நிழலாகச் சோகம் ஒட்டிக் கொண்டிருக்கும்.

ஆபீஸுக்கு எதிர்ப்புறத்து ஒற்றைச் சுவரில் நாங்கள் வரிசையாக உட்கார்ந்திருப்போம் ஒரு காலத்தில் அதுவே உற்சாகம் தருவதாக இருந்தது.

சலிக்காத விஷயம் உரையாடல். ஒற்றைச் சுவரில் முதுகை வளைத்து உட்கார்ந்து கொண்டு ஓயாமல் பேசலாம்! ஜோக் சொல்லலாம் — ஜோக் உபயம்: இண்டர்வியூக்கள்!

எல்லோரும் குலுங்கிக் குலுங்கிச் சிரிப்போம்! வலுக்கட்டாயமாய் எங்களிடம் ஒட்டிக் கொண்டிருக்கும் சோகங்களை எல்லாம் உதறி விடுகிற உத்வேகத்துடன் சிரிப்போம்!

இப்போதெல்லாம் சிரித்துக்கூட ஏமாற்றிக் கொள்ள எங்களால் முடிவதில்லை! புதுசாக வந்தவர்கள்தான் அதிகமாகச் சிரிக்கிறார்கள்!

நாலைந்து பேர் ஓரமாக நின்று கொண்டு கவலை முகங்களுடன் நமது சினிமாக்களின் தரத்தையும், இலக்கியங்களையும் பொறுப்பாக விமர்சிப்பதும் உண்டு.

அப்பாவுக்கு இவற்றைப் பற்றி என்ன தெரியும்? கலீல் கிப்ரான் என்றால் 'புதுரக நெல் விதையா?'



"அப்பாவுக்கு உடம்பு முடியல லைன்னா ஆஸ்பத்திரிக்கு வேணும்னா கூட்டிட்டுப் போறேன்! என்னால வயல் காட்டுக்குப் போயி நெல்லு மூட்டையெல்லாம் எண்ணிட்டிருக்க முடியாது... நான் அஞ்சு வருஷமா மண்டைய உடைச்சிப் படிச்சது நெல்லு மூட்டையை எண்ணறதுக்கில்லே..."

ஆம்ப்ரோ மில்க் பேஸ்

ஸ்கூல்
குழந்தைகளின்
பிஸ்கெட்




பாலில் உள்ள எல்லா
ஊட்டச்சத்துக்களும் அடங்கியது.

என்று 'அப்பா' வித்தனமாகக் கேட்பார்.

நிர்ணயமில்லாது கோபம் வந்தது — என்னால் முடியாது! இவர்களைப் போல் நினைவுகளில் கனவுகளைத் தொலைத்து விட்டு வாழ்க்கை முழுவதும் தேடிக் கொண்டிருக்க என்னால் முடியாது.

என்னை, எனது ஆசைகளை ஏன் இவர்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை?

'புரியாவிட்டால் புரிய வைக்க வேண்டும்!'

மாடிப்படிகளில் யாரோ ஏறிவரும் சப்தம் — அம்மா!

''என்னடா சேகர்! கீழேயிருந்து எவ்வளவு நேரமாக் கத்திட்டிருக்கேன். சாப்பிட வாயேண்டா! தோசை ஆறிடப் போகுது.'' என்றுவிட்டு உடனேயே திரும்பிப் போய் விட்டாள்.

அம்மா என்றாலே 'குளோஸப்' புன்னகையாய்ச் சிரிக்கும் முகம் மனசுக்குள் விரியும். எல்லாவற்றையும் விட அம்மாவிடம் என்னை அசர வைப்பது, அவள் அப்பாவின் பேச்சைச் சுவாரஸ்யமாகக் கேட்டுக் கொண்டிருப்பதுதான். அல்லது சுவாரஸ்யமாகக் கேட்பதாகக் காட்டிக் கொள்வது! அப்பாவுக்கு வயலையும் நெல்லையும் தவிர வேறு எதைப் பற்றியும் பேசக் கூடத் தெரியாது.

இறங்கிக் கீழே போன போது அம்மா தோசையில், சட்னி ஊற்றிக் கொண்டிருந்தாள்.

''உட்காரு!'' — தட்டை நகர்த்தினாள். உட்கார்ந்தவுடன் அவளும் எதிரில் உட்கார்ந்து என்னையே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு,

''அப்பா ரொம்ப வருத்தப்பட்டாரு!'' என்று சன்னமான குரலில் சொன்னாள்.

நிமிர்ந்து அம்மாவின் விழிகளைச் சந்தித்து, ''எதுக்கு?'' என்றேன். இன்றுவரை இதுபோன்ற விஷயங்களைப் பற்றி அம்மா பேசியதேயில்லை.

''வயல்காட்டுக்கு வரமாட்டேன்னு சொன்னியாமே? உடம்புக்குமுடியல்லேன்னு தானே கூப்பிட்டாரு?''

நான் பார்வையைச் சங்கடமாக விலக்கினேன். ஒருவாய்த் தோசை சாப்பிட்டுவிட்டு, ''உடம்புக்கு முடியல்லேன்னா ஆஸ்பத்திரிக்கு வேணும்னா கூட்டிட்டுப் போறேன்! என்னால வயல் காட்டுக்குப் போயி நெல்லு மூட்டை எல்லாம் எண்ணிக்கிட்டிருக்க முடியாது'' — குரலில் இலேசாகக் கோபம் தலைகாட்டியது.

அம்மா பேசாமல் உட்கார்ந்திருந்தாள்.

''இங்க பாருங்கம்மா! நீயும் சரி... அப்பாவும் சரி! ஒரு விஷயத்தை ஒழுங்காப் புரிஞ்சுக்கணும். நான் அஞ்சு வருஷம் மண்டையை உடைச்சிப் படிச்சது நெல்லு மூட்



டையை எண்ணறதுக்கில்லே... புரியுதா? என்னை அவரால ஆபீசர் ஆக்க முடியல் லேன்னாலும், வேலைக்காரன் ஆக்காம இருந்தால் போதும்!'' சற்றுக் கடுமை யாகவே சொன்னேன். எனது நிலையைத் தெளிவுபடுத்தியாக வேண்டும்!

''கொஞ்சம் சட்னி ஊத்திக்க,'' — அவளே ஊற்றினாள். தொண்டையைச் செருமி விட்டுப் பேசத் தொடங்கினாள்.

''சேகர்! நீ படிச்சவன்... நான் சொல்றது உனக்குப் புரியும்னு நினைக்கிறேன்... உன்னைப் படிக்க வைக்கணும்னு அப்பா எவ்வளவு ஆசைப்பட்டாரு தெரியுமா? உனக்கு நீ ஆசைப்படற மாதிரி வேலை கிடைக்கலேன்னு அவருக்கு எவ்வளவு வேதனை இருக்கு தெரியுமா...? என்ன பண்ண முடியும்? நாம் ஆசைப்படற மாதிரி நடக்கலேன்னா நடக்கிற மாதிரி ஆசைப் படக் கத்துக்கணும்! இதையெல்லாம் காலேஜ்லே சொல்லித்தர மாட்டாங்க சேகர்...

''இங்கே பாரு! படிப்புங்கிறது இந்தப் பெரிய பிரபஞ்சத்துல ஏதோ ஒன்றைப் பத்திக் கொஞ்சம் போலத் தெரிஞ்சுக்கிற ஒரு முயற்சி! அவ்வளவுதான்! நிறையப் படிக்கப் படிக்கத்தான் இன்னும் நாம படிக்க வேண்டியது எவ்வளவு இருக்குன்னு புரியும்... சேகர்! படிப்பு வேலைக்குப் போற துக்கோ, அதிகாரம் பண்றதுக்கோ இல்லை! மத்தவங்களைக் கஷ்டப்படுத்தாம, அடுத்த வங்களுக்குத் தீங்கு நினைக்காம வாழ்க் கையை எப்படி அணுகணும்னு தெரிஞ்சுக் கறதுதான் நிஜமான படிப்பு! ஒரு புத்திசாலி வாழ்க்கைல ஒவ்வொன்றையும் பாடமா எடுத்துக்கணும்...! அதுக்கு மேல உன் இஷ் டம்!'' நிதானம் குறையாது பேசினாள். ஆனால் அர்த்தங்கள் வேகமாய், விளாற லாய் மனத்தில் பட்டுத் தெறித்தன.

அந்த வேதனையிலும் காதலியின் கைபட்டதுபோல் ஒரு சிலிர்ப்பு இருந்தது. உண்மை எத்தனை கவித்துவத்துடன் ஒலிக் கிறது!

நான் பிரமிப்போடு அம்மாவைப் பார்த் தேன். ஆண்டவனே! ஒவ்வொரு மனிதனுள் ளும் எத்தனை கலீல் கிப்ரான்கள்! எத்தனை டால்ஸ்டாய்கள்!

''இன்னொரு தோசை வைக்கட் டுமா?'' இயல்பாகக் கேட்டாள்.

''வேண்டாம்மா!'' நீட்டிய அவளது கையைப் பற்றி அழுத்தினேன்.

அடுத்த அரை மணி நேரத்தில் வயல் காட்டுக் களத்தில் இருந்தேன். ஆச்சரியப் பட்டுப் பார்த்த அப்பாவிடமிருந்து நோட் டையும் பேனாவையும் வாங்கிக் கொண் டேன்.

மதியச் சாப்பாட்டு நேரம் வரை சுறுசுறுப் பாய் மணித்துளிகள் நகர்ந்தன. திரும்பிப் பின்னால் பார்த்தேன். அப்பா மர நிழலில் கிடந்த நாற்காலியில் நிம்மதியாய்ச் சாய்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். நானும் மர நிழலில் ஒதுங்கிக் கொண்டேன்.

# பொன்னியின் செல்வன்



## அத்தியாயம் 39
## காரிருள் சூழ்ந்தது!

ஆதித்த கரிகாலனுடைய பயங்கரமான வெறி கொண்ட சிரிப்பு, யாழ்க் களஞ்சியத்தில் ஒளிந்திருந்த வந்தியத்தேவனுடைய காதில் விழுந்து அவனுக்கு ரோமாஞ்சனத்தை உண்டாக்கியது. விரைவில் ஏதோ விபரீதம் நிகழப் போகிறது என்று அவனுடைய உள்ளுணர்ச்சி கூறியது. நிழல் வடிவங்கொண்ட யம தர்மராஜன் கையில் பாசக் கயிறுடன் அந்த அறையில் பிரசந்நமாகியிருந்தான். பாசக் கயிற்றை வீசுவதற்குச் சமயம் நோக்கிக் கொண்டிருந்தான். ஆனால் யார் மீது எறியப் போகிறான்? யாருடைய உயிரைக் கொண்டு போகப் போகிறான்? கரிகாலன் உயிரையா? அல்லது நந்தினி தேவியின் உயிரையா? ஒருவேளை அவர்கள் இருவரையுமே மரணம் நெருங்கிக் கொண்டிருக்கிறதா? சகோதரன் சகோதரியைக் கொல்லப் போகிறானா? சகோதரி சகோதரனைக் கொல்லப் போகிறாளா? அல்லது இருவரும் ஒருவரையொருவர் கொன்று கொண்டு சாகப் போகிறார்களா? — இம் மாதிரி ஏதும் நடவாதபடி தடுப்பதற்குத் தான் இளையபிராட்டி தன்னை விரைந்து போகும்படி அனுப்பி வைத்தாள். தன்னால் இயன்றதைச் செய்தாகி விட்டது. இருவரிடமும் அவர்களுக்குள்ள உறவைப் பற்றிச் சொல்லியாகி விட்டது. இருவருடைய உள்ளமும் இளகும்படியும் செய்தாகி விட்டது. ஆனாலும், பலன் ஏற்படுமா? வெறி கொண்ட கரிகாலரையோ, பிரமை பிடித்த நந்தினியையோ, கொடூரச் செயல் எதுவும் செய்யாமல் தடுக்க முடியுமா? இந்தச் சமயத்தில் தான் நடுவில் குறுக்கிடுவதால் ஏதேனும் நன்மை விளையுமா? ஒருவேளை இருவருக்கும் மத்தியில் தன்னுடைய உயிரைப் பலி கொடுப்பதினால், அவர்களுடைய குரோதம் தணியுமா? — இவ்வாறெல்லாம் எண்ணி வந்தியத்தேவனுடைய உள்ளக் கடல் கொந்தளித்துக் கொண்டிருந்தது. இன்னும் சிறிது பொறுத்துப் பார்க்கலாம். — தான் அவசரப்பட்டுக் குறுக்கிடுவதினால் காரியம் கெட்டுப் போக வேண்டாம் என்று பல்லைக் கடித்துக் கொண்டு நின்றான்.

கரிகாலருடைய வெறி கொண்ட சிரிப்பு அடங்கிய பிறகு, அவர்களுடைய சம்பாஷணை மேலும் தொடர்ந்தது.

''ஐயா! என் வாழ்நாளில் தங்களுக்கு மகிழ்ச்சி தரும்படியான காரியம் எதுவும் நான் செய்ததில்லை. சாகும் சமயத்திலாவது தாங்கள் சிரித்து மகிழுவதற்குக் காரணமானது பற்றிச் சந்தோஷம்'' என்றாள் நந்தினி.

''ஆம், நந்தினி! இன்றைக்கு எனக்கு மிகச் சந்தோஷமான தினந்தான். இத்தனை வருஷமாக நீ என்னைப் படுத்தி வைத்த பாட்டுக்கெல்லாம் இன்றைக்கு முடிவு ஏற்படப் போகிறது. இந்தத் தடவை நான் காஞ்சியிலிருந்து புறப்பட்ட போது ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு தான் வந்தேன். உன்னை நேரில் பார்த்த பிறகு ஒருவேளை என் மனம் சலித்து

அமரர் கல்கி

விடுமோ என்று பயந்து கொண்டிருந்தேன். அதற்கிடமில்லாமல், நீயே வாளை என் கையில் கொடுத்து விட்டாய்!'' என்று கூறிக் கரிகாலன் மீண்டும் சிரித்தான்.

''கோமகனே! எனக்கும் இன்று சுதினந் தான். தங்கள் கையினால் வெட்டுண்டு இறப்பதைப் போன்ற இனிமையான மரணம் எனக்குக் கிட்டப் போவதில்லை. ஒரு காலத்தில் தாங்கள் என் கழுத்தில் பூமாலை சூட்டப் போகிறீர்கள் என்று ஆசைக் கனவு கண்டு கொண்டிருந்தேன். அது நிறைவேற முடியாமற் போயிற்று. தங்கள் கையிலுள்ள வாளை என் கழுத்தில் சூட்டிக் கொள்ளும் பேறாவது எனக்குக் கிடைக்கட்டும். ஐயா! நேரம் ஆகிறது. ஏன் தாமதிக்கிறீர்கள்?'' என்றாள் நந்தினி.

''பல வருஷம் தாமதித்தாகி விட்டது. இன்னும் சில நிமிஷம் தாமதிப்பதினால் நஷ்டம் ஒன்றுமில்லை. நந்தினி! சற்று என்னைப் பார்! கடைசி முறையாக என்னைப் பார்த்து என் கேள்விக்கு மறுமொழி சொல்! பூமாலை சூட்ட வேண்டிய கையினால் நான் ஏன் உனக்கு வான் மாலை சூட்ட வேண்டும்? நீ ஒரு காலத்தில் ஆசைக் கனவு கண்டது உண்மையாக இருந்தால், இப்போது ஏன் அதை நிறைவேற்றிக் கொள்ளக் கூடாது? அதற்குத் தடையாக நிற்பவர்கள் யார் என்று சொல்லு! உன்னைக் கொல்லுவதற்குப் பதிலாக அவர்களைக் கொன்று விட்டு மறு காரியம் பார்க்கிறேன்!'' என்றான் கரிகாலன்.

''வேண்டாம், ஐயா! வேண்டாம்! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு. என் காரணமாக, இனி வேறு யாரும் சாக வேண்டாம்! யாரும் தடையாக நிற்கவும் இல்லை. என்னுடைய தலைவிதிதான் தடையாக இருக்கிறது!''

''அந்தத் தடையை ஒரு நொடியில் நான் தவிடுபொடி செய்து விடுகிறேன். தலைவிதியின் பேரில் பாரத்தைப் போடாதே! பிரம்மா எழுதிய எழுத்தை நான் மாற்றி எழுதுகிறேன், பார்!....''

நந்தினி குறுக்கிட்டு, ''பிரம்மா எழுதிய எழுத்தை மாற்றி எழுதலாம். ஆனால் ஒருவருடைய பிறப்பை மாற்றி அமைக்க முடியுமா?'' என்று கேட்டாள்.

''எதைப் பற்றிக் கேட்கிறாய், நந்தினி! நமது சிறு பிராயத்தில் உன்னைப் பட்டர் குலத்துப் பெண் என்றும், அதனால் உன்னுடன் சிநேகம் செய்யக் கூடாதென்றும் என் குடும்பத்தினர் சொன்னார்களே, அதைப் பற்றியா? இல்லை! நீ பட்டர் குலத்தில் வளர்ந்தவளேயன்றி அந்தக் குலத்தில் பிறந்தவள் அல்ல என்பதை நீயும் நானும் முன்பே அறிந்திருந்தோம்.''

''அதைப் பற்றி இப்போது சொல்லவில்லை, ஐயா! தங்கள் அருமை நண்பர், வாணர் குலத்து வீரர் — கொண்டு வந்த செய்தியைப் பற்றியே சொல்லுகிறேன். பழையாறை இளையபிராட்டி அவசரமாகச் சொல்லியனுப்பிய செய்தியைப் பற்றியே கூறுகிறேன். நான் தங்கள் சகோதரி என்பதை இதற்குள்ளாகவே மறந்து விட்டீர்களா?''

''நந்தினி! அன்றைக்கு நான் உன்னிடம் அதைப் பற்றிச் சொன்ன போது, நீ அதை நம்பவில்லை. உன்னையும் என்னையும் பிரித்து வைப்பதற்குச் செய்யும் இன்னொரு சூழ்ச்சி என்றாய். பிறகு நானும் யோசித்து அதே முடிவுக்கு வந்தேன். அதை நிச்சயம் செய்து கொள்ள வேண்டுமானால்....''

''வேண்டாம்! வேண்டாம்! எனக்கு அதைப் பற்றிச் சந்தேகமே இல்லை. கோமகனே! தங்களுக்கும் எனக்கும் இரத்த சம்பந்தம் ஏதுமில்லை....''

''பின், என்ன தடை, நந்தினி?''

''நான் தங்களுக்குப் பாட்டனார் முறையிலுள்ள பழுவேட்டரையரை மணந்தவள். தங்களுக்குப் பாட்டி முறையில் உள்ளவள். இது போதாதா?''

''நந்தினி! அந்தக் கதையைச் சொல்லி என்னை மறுபடியும் ஏமாற்றப் பார்க்க வேண்டாம். உலகத்தின் முன்னிலையில் நீ பழுவேட்டரையரின் இளைய ராணியாக இருக்கலாம். ஆனால் உண்மையில் நீ அவரை மணந்து கொள்ளவில்லை. ஏதோ காரணார்த்தமாகவே அவருடைய அரண்மனையில் வந்திருக்கிறாய். முன்னொரு தடவை, தஞ்சையில் நான் கேட்ட போது, இவ்வாறுதான் கூறினாய். அப்போது நான் நமது ஆசைக் கனவை உனக்கு நினைவூட்டினேன். அதை நிறைவேற்றுவதற்கு நீ பயங்கரமான நிபந்தனைகளை விதித்தாய்! பழுவேட்டரையரைக் கொன்று, என் தந்தையையும், சகோதரியையும் சிறையிலடைத்து விட்டு, உன்னைச் சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைக்க வேண்டும் என்றாய். வெறி கொண்ட ராட்சஸி நீ என்று தீர்மானித்துக் கொண்டு நான் காஞ்சிக்குப் போனேன். அப்புறம் நீ என்னை விட்டு விட்டாயா? இல்லை! ஓயாமல் ஒழியாமல் கனவிலும் நினைவிலும் வந்து என்னை வதைத்துக் கொண்டிருந்தாய். சில சமயம் அழுது புலம்பி என்னைத் துன்புறுத்தினாய்; சில சமயம் மோகனப் புன் சிரிப்புச் சிரித்து என் உயிரை வதைத்தாய்; சில சமயம் பிச்சியைப் போல் சிரித்து என்னையும் பித்தனாக்கினாய்!....''

''கோமகனே! தங்களுடைய மனப் பிரமைக்கு என் பேரில் ஏன் குற்றம் சுமத்துகிறீர்கள்? தாங்கள் எனக்குச் செய்த அநீதிக்

கும் கொடுமைக்கும் பலனை அனுபவித்தீர்கள். அதற்கு நான் என்ன செய்வேன்? நான் மட்டும் கஷ்டப்படவில்லையென்று எண்ணுகிறீர்களா? பழுவேட்டரையரின் மாளிகையின் சுகபோகங்களில் ஆழ்ந்து குதூகலமாயிருந்தேன் என்று நம்புகிறீர்களா?'' என நந்தினி கேட்ட குரலில் மீண்டும் பழையபடி ஆத்திரமும் கொடூரமும் பொங்கித் ததும்பின.

இதைக் கேட்டு வந்தியத்தேவன் பீதி கொண்டான். அவனுடைய உடம்பு படபடத்தது.



தித்த கரிகாலரின் ஸ்வரமும் ஏறத் தொடங்கியது.

''நீயும் கஷ்டப்பட்டதாகவா சொல்கிறாய்? அப்படியானால், இப்போது ஏன் நாம் ஏதேதோ பேசிக் கொண்டு வீண் பொழுது போக்க வேண்டும்? என்னுடன் புறப்பட்டு வருவதற்கு உன்னுடைய சம்மதத்தைத் தெரியப்படுத்து. உடனே புறப்பட்டுச் செல்வோம். உனக்காக நான் இந்தப் பெரிய சோழ இராஜ்யத்தைத் தியாகம் செய்து விட்டு வரச் சித்தமாயிருக்கிறேன். பிறந்த நாட்டையும் தாய் தந்தையரையும் உற்றார் உறவினரையும் துறந்து விட்டு வருகிறேன். கப்பல் ஏறிக் கடல் கடந்து செல்வோம். கடல்களுக்கு அப்பால் எத்தனை எத்தனையோ அற்புதமான தீவ தீவாந்தரங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றை அடைவோம். உன்னைக் காட்டிலும் இந்த இராஜ்யம் எனக்குப் பெரியதன்று.''

''கோமகனே! தாங்கள் இராஜ்யத்தைத் துறந்தாலும் துறப்பீர்கள்! ஆனால் இந்தக் கீழ்க்குல மகள் புராதனமான சோழ சிங்காதனத்தில் ஏறுவதற்குச் சம்மதிக்க மாட்டீர்கள். இல்லையா?'' என்று கூறி விட்டு நந்தினி நகைத்த நகைப்பில் தீப்பொறி பறந்தது.

''பெண்ணே! இதை வேறு விதமாகப் பார்! உனக்கு என்னைக் காட்டிலும் சோழ சிங்காதனம் உயர்வானதா? என்னிடம் நீ அந்த நாளிலிருந்து காட்டிய பிரியம் எல்லாம் சிங்காதனம் ஏறி மணிமகுடம் சூடும் ஆசையினால் நடித்த நடிப்புத் தானா?'' என்றான் கரிகாலன்.

''ஆகா! அப்படியே வைத்துக் கொள்ளுங்கள். எனக்கு அரண்மனை வாழ்வும் அரச போகமும் அரியாசனமும்தான் வேண்டும். இவற்றுக்காவே, பழுவேட்டரையரை நான் மணந்தேன். இவற்றுக்காகவே வீர பாண்டியரைக் காப்பாற்றுவதற்கு முயன்றேன்...''

''அடி பாதகி! அவன் பெயரை எதற்காக இப்போது சொல்லுகிறாய்?'' என்று கர்ஜனை செய்தான் கரிகாலன். நந்தினி மறுமொழி கூறுவதற்கு முன்னால் அவன் தொடர்ந்து மேலும் கூறினான்:—

''ஆகா! எனக்குத் தெரிகிறது. உன்னுடைய சூழ்ச்சியெல்லாம் எனக்கு இப்போது நன்றாய்த் தெரிகிறது. வீர பாண்டியனுடைய பெயரைச் சொன்னால் எனக்கு ஆத்திரம் வரும். நான் உன்னை உண்மையாகவே கொல்ல வருவேன். உடனே இங்கு நீ காலால் இட்டதைத் தலையால் செய்யக் காத்திருக்கும் வாலிப சிங்கங்களில் ஒருவன் வந்து என்னைக் கொன்று விடுவான் என்பது உன் அந்தரங்க நோக்கம். அடி சண்டாளி! அந்த வந்தியத்தேவன் எங்கே இருக்கிறான்? எங்கே அவனை மறைத்து வைத்திருக்கிறாய், சொல்! இங்கேதான் அவன் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும். நீ என்னோடு வர மறுப்பதற்குக் காரணமும் இப்போது நன்றாய்த் தெரிகிறது. ஆமாம்; அவன்தான் காரணம்! அவனோடு நீ ஓடிப் போக எண்ணியிருப்பதுதான் காரணம். பழுவேட்டரையரை நீ இவ்விடம் விட்டு அனுப்பியதற்கும் அவன்தான் காரணம். நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்து பேசிக் கொண்டுதான் இப்படியெல்லாம் சூழ்ச்சி செய்திருக்கிறீர்கள்... ஆகா! எப்படி நான் ஏமாந்து போனேன்? எங்கே அந்தப் பாதகன் வந்தியத்தேவன்? எங்கே உன்னுடைய புதிய காதலன்...?''



வ்வாறு ஆதித்த கரிகாலர் வெறிக் கூச்சல் போட்டுக் கொண்டே கத்தியைச் சுழற்றிக் கொண்டு அங்குமிங்கும் அந்த அறையில் ஓடத் தொடங்கினார். ஒரு சமயம் யாழ்க் களஞ்சியத்தை நெருங்கி வந்தார். அப்போது நந்தினி ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று அவர் காலடியில் விழுந்து ''கோமகனே! இதைக் கேளுங்கள்! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு. நான் சொல்வதைக் கேட்டு விட்டுப் பிறகு எது வேணுமானாலும் செய்யுங்கள். வாணர்குல வீரரைப் பற்றித் தாங்கள் கூறுவது அபாண்டம். பூமாதேவி பொறுக்க மாட்டாள். அவருக்கு ஏதேனும் தாங்கள் தீங்கு செய்தால், என் அருமைத் தோழி மணிமேகலை உயிரையே விட்டு விடுவாள்! தங்களுக்கு மகத்தான பாவம் சம்பவிக்கும். வேண்டாம்! இதோ என் நெஞ்சைப் பிளந்து பாருங்கள். வீரபாண்டியருடைய வாளினாலேயே என் நெஞ்சைக் கீறிப் பாருங்கள். அதற்குள்ளே தங்களுடைய திருவுருவத்தைத் தவிர வேறு எதுவும் இராது. இது சத்தியம்! சத்தியம்! சத்தியம்!'' என்று கூறி விட்டு நந்தினி விம்மினாள்.

ஆதித்த கரிகாலனின் வெறி மீண்டும் சிறிது தணிந்தது போல் காணப்பட்டது.

''அப்படியானால், என்னுடன் வரு

வதற்கு நீ ஏன் மறுக்கிறாய்? அதையாவது சொல்லி விடு! ஏன் என் கையினால் உன்னை வெட்டிக் கொல்லும்படி தூண்டுகிறாய்? உண்மையைச் சொல்லி விடு!'' என்று அலறினான் கரிகாலன்.

''ஆகட்டும்; இதோ சொல்லுகிறேன். என்னுடைய நெஞ்சில் தங்களைத் தவிர வேறு யாருக்கும் இடம் கிடையாது. இது சத்தியமானபோதிலும், நான் தங்களுடன் வர முடியாது. தங்களை மணந்து கொள்ளவும் இயலாது. அதற்குத் தடையாயுள்ள ஒரு பெரிய காரணம் இருக்கிறது. அதைச் சொல்லுவதற்கே எனக்குப் பயமாயிருக்கிறது. ஆம், கோமகனே! உண்மையில் அதைச் சொல்லுவதற்காகவே நான் இங்கே வந்தேன்; தங்களையும் வரச் செய்தேன். அதைச் சொல்லி விட்டு என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்வதற்காக வந்தேன். இந்தத் துர்ப்பாக்கிய சாலியை மறந்து விட்டுத் தங்கள் குலத்துக்கும் பதவிக்கும் உகந்த பெண்ணை மணந்து வாழும்படி கெஞ்சிக் கேட்டுக் கொள்வதற்காக வந்தேன். ஆனாலும் அதைச் சொல்லத் தயங்கினேன். அதைச் சொல்லலாம் என்று நினைக்கும்போதே பயமாயிருக்கிறது. தங்களுடைய கோபத்தைக் கொழுந்து விட்டெரியச் செய்வோமோ, அதனால் இன்னும் என்ன தீங்கு நேரிடுமோ என்று அச்சமாயிருக்கிறது. தாங்கள் அமைதியுடனிருப்பதாக வாக்குக் கொடுத்தால்...''

''சொல், நந்தினி, சொல்! எவ்வளவு கசப்பான விஷயமாயிருந்தாலும் கேட்டுப் பொறுத்துக் கொள்வேன். சற்று முன், உன்னை மறந்து விட்டு வேறு பெண்ணை மணந்து சந்தோஷமாயிருக்கும்படி புத்திமதி கூறினாய்! அதற்கே நான் கோபித்துக் கொள்ளவில்லையே? வேறு என்ன கூறினால்தான் கோபித்துக் கொள்ளப் போகிறேன்? ஆனால் மறுபடியும் ஏதாவது கற்பனை செய்யாதே!....''

''கோமகனே! என் வாழ்க்கையே ஒரு கற்பனை. என் பிறப்பே ஒரு புனை கதை. என் வாழ்க்கையைச் சிறிது காலம் நீடிப்பதற்காகவும், நான் கொண்ட கருமத்தை முடிப்பதற்காகவும் நான் பலமுறை கற்பனைக் கதை புனைய வேண்டியதாயிருந்தது. இனி அதற்கு அவசியம் ஒன்றும் இல்லை. இன்றுடன் என் பொய் வாழ்க்கையை முடித்துக் கொள்ளப் போகிறேன். தங்களுடைய மனத்துன்பத்தை அதிகமாக்கக் கூடாது என்பதற்காகவே சில உண்மைகளை நான் அறிந்த பிறகும் தங்களுக்குச் சொல்லவில்லை. தாங்கள் என்னை வெறுத்து விட வேண்டும் என்பதற்காகவே பல கற்பனைகளைப் புனைந்தேன். பல பயங்கரமான காரியங்களைச் செய்யும்படி கூறினேன். என் உள்ளத்தில் ஓயாத போராட்டம் நடந்து கொண்டிருந்தது. என் கடமையும், நான் எடுத்துக் கொண்ட சபதமும், தங்கள் பேரில் கொண்ட காதலும் ஓயாமல் போராடிக் கொண்டிருந்தன. இவற்றினால் நான் அடைந்த துயரத்தைச் சொல்லி முடியாது. கடைசியாக, இன்று அந்தப் போராட்டமெல்லாம் முடியும் தருணம் நெருங்கியிருக்கிறது. என்னைப் பற்றிய உண்மையைச் சொல்லி



விடுகிறேன். அதைக் கேட்ட பிறகு என்னைத் தங்கள் கையினாலேயே கொன்று விடுங்கள்! ஆனால் வேறு யாருக்கும் தாங்கள் தீங்கு செய்ய வேண்டாம்! வீண் பாவத்துக்கும் பழிக்கும் ஆளாக வேண்டாம்!....."

"பாவம்! பழி! இனிப் புதிதாக நான் அடையக்கூடிய பாவம் – பழி என்ன இருக்





"உண்மையான ஜனநாயகவாதி யார்?" என்று ஒருவர் காந்தியடிகளைப் பார்த்துக் கேட்டார்.

"ஆண்டவன்!" என்றார் அடிகள்.

"ஆண்டவனா? வேடிக்கையாக இருக்கிறதே!"

"இதில் வேடிக்கை என்ன இருக்கிறது? உன்னையும், என்னையும் போல் எத்தனையோ மக்களைப் படைத்தவன். நன்மை — தீமை; பாவம் — புண்ணியம் ஆகியவற்றையும் படைத்தான். அவரவர்களுக்கு வேண்டியதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் பொறுப்பைத் தன்னிடம் வைத்துக் கொள்ளவில்லை. மக்களிடமே ஒப்படைத்து விட்டான்! ஜனநாயகவாதியாக இல்லா விட்டால், மக்களிடம் ஒப்படைத்து இருப்பானா?" என்றார் அடிகள்!

— எஸ். குருமூர்த்தி.

ஆதாரம்: உலக விடுதலை வீரர்கள்.

கிறது? ஆயினும், சொல், நந்தினி! என்னுடன் நீ வருவதற்கு, — நம் இளம் பிராயத்து ஆசைக் கனவு நிறைவேறுவதற்கு, — தடையாயிருக்கும் உண்மையான காரணம் என்னவென்று சொல்! அது எவ்வளவு பயங்கரமான உண்மையாக இருந்தாலும் சொல்! அதோ அந்தத் திரைச்சீலைக்குப் பின்னால் யாரோ ஒளிந்திருக்கிறார்கள் என்று நான் எண்ணிக் கொண்டிருந்தவரையில், ஒளிந்திருப்பது யார் என்று தெரியாதிருந்த வரையில், என் மனம் அமைதி இழந்திருந்தது. உன்னுடன் பேசிக்கொண்டிருந்த போது, என் உள்ளம் அதைப் பற்றியே எண்ணமிட்டுக் கொண்டிருந்தது. ஒளிந்திருந்தவள் மணிமேகலை என்று தெரிந்த பிறகு என் மனக் குழப்பமும் நீங்கியது. உண்மை தெரியாதிருக்கும் வரையிலேதான் பயம், கோபம், குழப்பம் எல்லாம்! எவ்வளவு கசப்பாயிருந்தாலும் உண்மை தெரிந்து போய்விட்டால் மனம் அமைதி அடைந்து விடும் அல்லவா?"

"கோமகனே! நான் சொல்லப் போகும் செய்தியினால் தங்கள் மனம் உண்மையிலேயே அமைதி அடையட்டும். அதுதான் என் பிரார்த்தனை. ஆனால் அந்தச் செய்தி நான் தங்களுடன் வருவதோ, தங்களை மணப்பதோ முடியாத காரியம் என்பதையும் நிரூபிக்கும். என் வாழ்க்கையின் முடிவு, என் துன்பங்களுக்கு விமோசனம், — மரணம் ஒன்றுதான் என்பதையும் தெரியப்படுத்தும். வாணர் குலத்து வீரர் என்னுடைய அன்னையைப் பற்றிய செய்தி கொண்டு வந்தார். அது உண்மை என்று நான் அறிவேன். ஈழ நாட்டில் வெறி கொண்டு அலைந்து திரிந்து கொண்டிருந்த மாதரசியைப்பற்றி நான் அறிவேன். அவள் என் அன்னை என்று அறிவேன். இது மற்றும் பலருக்கும் தெரிந்திருந்தது. ஏனெனில் அந்தப் பெண்ணரசிக்கும் எனக்கும் உருவத் தோற்றத்தில் அமைந்திருந்த ஒற்றுமையைப் பலரும் காணக் கூடியதாயிருந்தது. என்னை என் தாயார் என்று சிலர் சந்தேகிக்கும்படியிருந்தது. ஆனால் என் அன்னையை அத்தகைய வெறியளாக்கிய காரணம் இன்னதென்பதையும் சில காலத்துக்கு முன்பு நான் அறிந்து கொண்டேன். அது என்னைத் தவிர வேறு யாருக்காவது தெரியுமா என்பதை நான் அறியேன். யாரிடமும் இதுவரையில் நான் சொன்னதில்லை. இப்போது தான் தங்களிடம் முதன் முதலாகச் சொல்லப் போகிறேன். ஐயா! என் தந்தை யார் என்பதைத் தங்களுக்குச் சொல்லப் போகிறேன். கருணை கூர்ந்து எனக்குச் சற்று முன் கொடுத்த வாக்குறுதியை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். ஆத்திரத்துக்கும் குரோதத்துக்கும் இடங் கொடாதீர்கள்......"



வ்விதம் பலமான பூர்வ பீடிகை போட்டுக் கொண்டு நந்தினி ஆதித்த கரிகாலரை மிக நெருங்கி அவர் காதண்டை மிக மெல்லிய நடுங்கிய குரலில் "என்னைப் பெற்ற தந்தை..... தான்!" என்று கூறினாள். கூறிவிட்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள்.

ஆதித்த கரிகாலன் ஆயிரம் தேள் கொட்டியவனைப் போல் ஒரு கணம் துடிதுடித்துத் துள்ளினான்.

"இல்லை, இல்லை, இல்லை! ஒரு நாளும் இல்லை! நீ சொல்லுவது பொய், பொய், பெரும் பொய்!" என்று உரக்கக் கத்தினான்.

மறுகணமே அவனுடைய ஆவேசம் அடங்கியது. வேதனை மிகுந்த குரலில், "ஆம் நந்தினி, ஆம், நீ கூறியது உண்மையாகவே இருக்க வேண்டும். இப்போது எல்லாம் எனக்குத் தெரிகிறது. உன் மனத்திலே நிகழ்ந்திருக்கக் கூடிய போராட்டத்தைப் பற்றிய உண்மையும் தெரிகிறது. நீ எவ்வளவு துன்பப்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. உன் குழப்பத்துக்கும் தயக்கத்துக்கும் உன் பயங்கரமான வேண்டுகோளுக்கும் காரணம் தெரிகிறது. அன்றைக்கு நீ என்னுடைய காலில் விழுந்து மன்றாடிய போது நான் உன் வேண்டுகோளை மறுத்தது எவ்வளவு பெரிய கொடுமை என்று தெரிகிறது! நந்தினி! உலகில் வேறு எத்தனையோ தீங்குகளுக்குப் பிராயச் சித்தம் உண்டு. ஆனால் நான் செய்ததற்குப் பிராயச்சித்தம் கிடையாது. நம் இருவருக்கும் நடுவில் உள்ள தடை நீங்க வழியே கிடையாது! ஐயோ! இந்தப் பெரும்

# ஸ்ரீபெட் 'CINDERELLA'

**சமையலறையின் சகல உபயோகங்களுக்கும் ஏற்ற ஜாடிகள்.**

தகர டின்களில் வைத்துக்கொண்டு இனி நீங்கள் பொருட்களைத்தேட வேண்டாம். பாட்டில்கள் கைநழுவி விழுந்து உடைவதையும் இனி தவிர்க்கலாம். பிஸ்கெட், உப்பு, மத்தூள், காபிப்பொடி, முந்திரிப்பருப்பு, இனிப்புப் பலகார வகைகள், தேன் ஆகியவற்றையும், ரீபில் பைகளில் நீங்கள் வாங்கும் பொருட்களையும் பத்திரப்படுத்த ஸ்ரீபெட் 'சின்ட்ரெல்லா' ஜாடிகள் மிகவும் ஏற்றவை.

ஸ்ரீபெட் பாட்டில்களும் ஜாடிகளும் கண்ணாடிபோல உள்ளேயிருப்பதை பளிச்சென்று காண்பிப்பவை.

உடையாதவை. உணவுப் பொருட்களைப் பத்திரப்படுத்துவதற்கு ஏற்ற தகுதியும் தரமும் வாய்ந்தவை. நெடியற்றவை. கனமில்லாதவை. உபயோகிக்க வசதியானவை.

60 டிகிரி சென்டிகிரேட் வரை உஷ்ணத்தைத் தாங்கக் கூடியவை.










**பெட் இண்டஸ்டிரியல் கன்ஸ்யூமர் பாக்கேஜ் பிரைவேட் லிமிடெட்,**
3வது மாடி, மூகாம்பிகா காம்பிளெக்ஸ்,
4, லேடி தேசிகாச்சாரி சாலை, மயிலாப்பூர்,
சென்னை - 600 004.
போன்: 73768/74960



பாரத்தை இத்தனை நாள் எப்படி உன் மனத்தில் வைத்துத் தாங்கிக் கொண்டிருந் தாய்? எப்படி இந்தப் பாதகன் இப் பூமியில் உயிர் வாழ்வதைச் சகித்துக் கொண்டிருந் தாய்? நல்லது; நம் இருவருடைய வாழ்க் கைக்கும் பரிகாரம் ஒன்றுதான்; விமோ சனம் ஒன்றுதான். இதோ, நந்தினி! என் பிராயச்சித்தம்!......"

யாழ்க் களஞ்சியத்திலே யிருந்து வந்தியத் தேவன் மேற்கூறிய சம்பாஷணைகளை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான். இடையிடையே கரிகாலரின் வெறி மூர்த் தண்யமாகிக் கொண்டிருந்தபோது அவன் அவர்களுக்கிடையே போக எண்ணினான். பிறகு அதனால் என்ன விபரீதம் நேரிடுமோ என்று தயங்கினான். அவர்களுடைய உணர்ச்சி மயமான பேச்சு அவனை ஒரு புறத்தில் செயலற்றவனாகச் செய்து கொண் டிருந்தது. நந்தினி தன்னுடைய தந்தை இன் னார் என்று கூறியது மட்டும் அவன் காதில் நன்றாக விழவில்லை. ஆனால் அவள் என்ன சொல்லியிருக்கக்கூடும் என்று அவன் மனத்தில் ஓர் ஊகம் உண்டாயிற்று. அது அவனைத் 'திடுக்கிடச் செய்தது' என் றாலும், வேறு எந்தவிதமாகக் கூறினாலும், அது வெறும் சம்பிரதாயமாகவே இருக்கும். அம்மாதிரி ஒரு பெரும் அதிர்ச்சியை அவ னுடைய அதிர்ச்சிகள் நிறைந்த வாழ்க்கை யில் அவன் அநுபவித்ததேயில்லை.

கடைசியாக, ஆதித்த கரிகாலர் அடங் கிய மெல்லிய தழதழத்த குரலில், நந்தினி கூறியதை ஒப்புக் கொள்ளும் முறையில், வார்த்தை சொல்லிக் கொண்டிருந்த போது, அவனுடைய ஆர்வமும் கட்டுக் காவலைக் கடந்தது. அவர் உரத்துச் சத்தமிட்டுக் கொண்டிருந்த வரையில் அவன் அவ்வள வாகப் பயப்படவில்லை; இப்போதுதான் அதிகமாக அஞ்சினான், என்ன செய்யப் போகிறாரோ என்ற பெருங் கவலையினால், யாழ்க் களஞ்சியத்திலிருந்து சிறிது தலையை நீட்டிப் பார்த்தான். பார்வைக்கு இலக்கான இடத்தில் நந்தினியும் கரிகாலரும் இல்லை. ஆனால் வேறொரு காட்சியைக் கண்டான். சுவரில் பதித்திருந்த நிலைக் கண்ணாடியில் அந்தக் காட்சி தெரிந்தது. வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவு துவாரத்தின் வழியாக ஒரு கோரமான முகம் தெரிந்தது. அது மந்திரவாதி ரவி தாஸனுடைய முகந்தான்! அடுத்த கணத் தில் வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவு மெதுவாகத் திறப்பதை வந்தியத் தேவன் கண்டான். திறந்த கதவின் வழியாக முதலில் ஒரு புலியின் தலையும் பிறகு அதன் உடலும் வெளிவருவதையும் பார்த் தான். உடனே, அவனுக்கு உடம்பில் உயிர் வந்தது; உள்ளத்தில் ஊக்கம் பிறந்தது; கால் கைகள் செயல் திறன் பெற்றன. யாழ்க் களஞ்சியத்தின் மறைவிலிருந்து தாவி வெளியில் பாய்ந்து செல்ல முயன்றான்.

அச்சமயம் பின்னாலிருந்து அவனுடைய கழுத்தில் வஜ்ராயுதத்தை யொத்த ஒரு கை சுற்றி வளைத்துக் கொண்டது. அண்ணாந்து நோக்கினான். காளா முகக் கோலங் கொண்ட ஓர் ஆஜானுபாகுவான உருவம் கண் முன்னே தெரிந்தது. ஆகா! இவன்



யார்? இங்கு எப்படி வந்தான்! இது என்ன இரும்புப் பிடி? கழுத்து நெரிகிறதே! மூச்சுத் திணறுகிறதே! விழி பிதுங்குகிறதே! இன்னும் சில கண நேரம் போனால், உயிரே போய்விடுமே....! வந்தியத் தேவன் ஒரு பெரு முயற்சி செய்து அந்த இரும்புக் கையின் பிடியைத் திமிறித் தளர்த்திக் கொண்டு வெளியில் பாய்ந்தான். பாய்ந்த வேகத்தில் தரையில் விழுந்தான். தலையிலே ஒரு பெரிய பாறாங்கல்லைப் போட்டது போல் இருந்தது. ஒரு கணம் அவன் கண்களின் முன் கோடி சூரியர்கள் கோடானு கோடி கிரணங்களைப் பரப்பிக் கொண்டு பிரகாசித்தார்கள். அடுத்த கணத்தில் அவ்வளவு சூரியர்களும் மறைந்தார்கள். நாலா புறமும் இருண்டு வந்தது. வந்தியத் தேவன் அக்கணமே நினைவை இழந்தான்.

யாழ்க் களஞ்சியத்திலிருந்து, அதன் வாசலில் கிடந்த வந்தியத் தேவனுடைய உடலை மிதித்துத் தாண்டிக் கொண்டு, ஒரு கோர பயங்கரமான காளாமுக உருவம் வெளிப்பட்டது.

யாழ்க் களஞ்சியத்தின் அருகில் தடால் என்ற சத்தத்தைக் கேட்டு நந்தினி திரும்பிப் பார்த்தாள். காளாமுக உருவம் கையில் கத்தியை உருவிக் கொண்டு தன்னை நோக்கி வருவதைக் கண்டாள். விழிகள் பிதுங்கும்படியான வியப்புடன் அந்த உருவத்தை நோக்கினாள். அவள் வயிற்றிலிருந்த குடல்கள் மேலே ஏறி மார்பையும் தொண்டையையும் அடைத்துக் கொண்டதாகத் தோன்றியது. கண்களைத் துடைத்துக் கொண்டு, எதிரே பார்த்தாள். கரிகாலன் கீழே விழுந்து கிடக்கக் கண்டாள். அவன் உடலில் வீர பாண்டியனுடைய வாள் பாய்ந்திருந்ததையும் கண்டாள்.

அப்போது அவளுடைய தொண்டையிலிருந்து விம்மலும் சிரிப்பும் கலந்த ஒரு பயங்கரமான தொனி எழுந்தது. அது அந்த அறையிலிருந்த கட்டில் முதலிய அசேதனப் பொருள்களைக் கூட நடுங்கும்படி செய்தது.

''அடி பாதகி! சண்டாளி! உன் பழியை நிறைவேற்றி விட்டாயா?'' என்று கூறிக் கொண்டே காளாமுக உருவம் அவளை மேலும் நெருங்கி வந்தது.

அதே சமயத்தில் வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவின் வழியாக உள்ளே நுழைந்த புலி உருவத்தின் மறைவில் ரவிதாஸனும் பிரவேசித்தான். காளாமுகனைப் பார்த்தவுடனே புலியைத் தூக்கி வீசி எறிந்தான். அந்த அறைக்கு இலேசாக வெளிச்சம் தந்து கொண்டிருந்த விளக்கை அந்தச் செத்த புலியின் உடல் தாக்கியது.

விளக்கு அறுந்து விழுந்தது.

அது அணைவதற்கு முன்னால் ஒரு கண நேரம் மணிமேகலையின் பயப் பிராந்தி கொண்ட முகத்தைக் காட்டியது.

'கிறீச்' சென்று கூவிக் கொண்டு மணிமேகலை அங்கிருந்து ஓடினாள்.

அந்தக் காரிருளில் சோகந்ததும்பிய விம்மல் குரலும் வெறி கொண்ட சிரிப்பின் ஒலியும் மரணத்தறுவாயில் கேட்கும் முனகல் ஓசையும் மனிதர்கள் விரைந்து அங்குமிங்கும் ஓடும் காலடிச் சத்தமும் கலந்து கேட்டன.

(தொடரும்)

## ஐம்பதில் வளையுமா என்று கேட்போருக்கு...

''இத்தனை நாள் ஏதோவொரு தினுஸிலேயே வாழ்க்கை நடத்தி விட்டோம். இப்போது திடீரென்று ஏதாவது சாஸ்திராப்யாஸம் செய்வது, கலையைக் கற்பது என்றால் எப்படி முடியும்? அதற்கு ஒரு வயஸ் இல்லையா? ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது என்று பழமொழி இல்லையா?'' என்று கேட்கலாம். அததற்கான வயதில்தான் அதுவும் ஸுலபமாக வரும் என்பதும் வித்யாப்யாஸத்துக்கு ஏற்ற ஒரு பருவம் உண்டு என்பதும் வாஸ்தவந்தான். ஆனாலும், 'இந்த தேசத்திலே பிறந்து விட்டு இதன் ஏராளமான சாஸ்த்ரங்களில் ஒன்று கூடத் தெரியாமலிருக்கிறோமே!' என்ற feeling இருந்தால் எந்த வயஸிலும் வித்யை வரும். ஆர்வமே இள வயஸின் துடிப்பையும் க்ராஹ்ய சக்தியையும் (கல்வியைக் க்ரஹித்துக் கொள்ளும் சக்தி) உண்டாக்கிவிடும்.

ஐம்பதில் வளையுமா என்று கேட்பதையே 'சாலஞ்ஜா'க எடுத்துக் கொண்டு, 'ஏ! வளையும்' என்று காட்ட முயல வேண்டும். உரிய வயஸில் ஒன்றைக் கோட்டை விட்டவர்கள் இப்படி 'சாலஞ்ஜ்' பண்ணி ஜயித்துக் காட்டவேதான் அந்தப் பழமொழி ஏற்பட்டிருக்கிறது என்று நினைக்க வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# ஒரு அமைதிப்படை வாபஸாகிறது!

கதை: பி.ஆர்.பார்த்தசாரதி
படம்: செல்லம்



















அடுத்து, வைதேகியின் கணவன் சுதர்சனுக்கு... போன் போட்டார் மாதவன்....
சே! திரும்பத் திரும்ப என்கேஜ்டு, இல்லாட்டா ராங் நம்பர்.


ஒரு மணி நேரம் கழித்து....
அப்பாடா! ஒரு வழியா லைன் கிடைச்சது.... ஹலோ ....சுதர்சனா? மாதவன் பேசுறேன்....சாயந்திரம் வீட்டுக்கு வாயேன் ...என் பெண்ணுக்கு....


மாதவனை முந்திக் கொண்டு சுதர்சன்...
காமர்ஸ்ல ஏதோ டவுட் இருக்கு... நான் வந்து கிளியர் பண்ணணும்... அப்படித் தானே?
அட, ஆமாம்.. ...ஆனா அது உனக்கு எப்படி தெரிஞ்சுது..?


இப்பத்தான் வைதேகி சொல்லி முடிச்சா. பார்டியின் போட்டுட்டு இங்கதான் வந்திருக்கா. காலம அவ அப்பா கிட்ட நீங்க சொன்னதை வாசல்ல சற்று நின்று கேட்டாளாம்....


...உங்களுக்குச் சிரமம் வைக்காமல் நாங்களே சமாதானமாயிட்டோம், மாமா! ராத்திரி ரயில்ல மன்னார்குடி போகிறோம்!


மன்னார்குடியா? ....எதுக்கு?


உங்களோட சண்டை போட்டுண்டு பிறந்தகம் போயிருக்கிற மாமியைச் சமாதானம் பண்ணி அழைச்சுண்டு வரத்தான்!

# இரண்டாவது சூரியன்

சினிமா பாட்டு கவிழ்த்து விட்டது! மர பெஞ்சில் உட்கார்ந்து வெள்ளைச் சுவருக்குள்ளே விழிகளைச் செலுத்தி இனம் புரியாத துக்கத்தில் உட்கார்ந்திருக்கும் போது எதிரே போய் வருபவர்கள் தெரியாது போய் விட்டது.

வெளியே வந்து பார்த்த பரத் நிலை குத்தி உட்கார்ந்திருந்த பானுமதியைச் சில கணங்கள் ஏறிட்டு விட்டு வெளியே ஓடினான். அட்ரோபின் ஊசி மருந்துகளுடன் உள்ளே மறுபடி வந்தான். ஊசி போட, நாடித் துடிப்பு கொஞ்சம் அதிகரித்தது.

''இந்த அம்மாவே குடிச்சுட்டு வாந்தி எடுத்துட்டாங்க. பாதி விஷ மருந்து வெளியே வந்துட்டிருக்கும். மிச்சமும் எடுத்துருவம். மேல் நர்ஸ் இருப்பாங்க தேடிப் பிடி'' என்றான் டாக்டர்.

மறுபடி ஓடினான். வாசலில் நின்று பேசிக் கொண்டிருந்தவரிடம் தன்மையாகப் பேசி அழைத்து வந்தான். 'நமக்குத் தெரிஞ்ச லேடி டிக்ட்வென்டி' என்று அவன் பேசுவது வாசலில் நின்ற ஹெச்.எம். காதில் விழுந்தது. அவனைப் பின்தொடர்ந்தாள். வாசலில் உட்கார்ந்திருந்த பானுமதியை உலுக்கினாள்.

''மோசமா இருக்கா மேடம். முக்கா பாட்டில் குடிச்சுட்டாளாம். பல்ஸ் ரேட் குறைஞ்சு போச்சாம்.'' மறுபடி பரத் வெளியே ஓடி வந்தான். ''மேடம், உள்ள வாங்க. சால்ட் வாட்டர் குடுத்து வாமிட் பண்ணச் செய்யணும்ங்கறாரு டாக்டர். ஸ்டமக் வாஷ் செய்யப் போறாரு. யாராவது பேஷண்ட்டைப் பிடிச்சுக்கணும்.''

ஊசி மருந்தில் கொஞ்சம் சுய நினைவு வந்த சாவித்திரியைச் சாய்மானமாக உட்கார வைத்திருந்தார்கள். "நீங்க இவங்க கூட வேலை செய்யறவங்களா. இவங்க அப்பா எங்கே?"

''வாசல்ல இருந்தாரு. கூப்பிடட்டுமா?''

''வேணாம். பின்னால் உட்கார்ந்து தோளை அழுத்திப் பிடிச்சுக்கங்க. மார்ல சாச்சுக்கங்க. பரத், புனல் வரத்துக்குள்ள உப்பு கரை அந்த பக்கெட்ல.'' அலுமினிய பக்கெட்டில் நீர் விட்டு டேபிள் சால்ட் கரைக்கப்பட்டது. ஒரு பக்கம் சரிந்திருந்த புடைவைத் தலைப்பை ஹெச். எம். மூடினாள்.

மேல் நர்ஸ் புனலும் ட்யூபுமாய் வந்தார். டாக்டர் அருகே வந்து தலையை நிமிர்த்தித் தாடையை இழுக்க, சட்டென்று ட்யூப் தொண்டைக்குள் இறக்கப்பட்டது. சாவித்திரி தவித்தாள். ட்யூப் பிடுங்க முயற்சி செய்தாள். ''விடாது பிடியுங்க. அசக்கினா உள்ள ரப்ச்சர் ஆவும். அழுத்திப் பிடியுங்க.'' பானுமதி தோளை இறுக்கிக் கொள்ள உப்புக் கரைசல் புனல் வழியே ஒரு சொம்பு ஊற்றப்பட்டது. சாவித்திரி கை கால் உதைத்துத் திமிறினாள். ஆடைகள் அலங்கோலமாயின. சாவித்திரி முன்பக்கம் தலை சரிக்க புனல் நீர் வெளியே வந்தது. டாக்டர் பின்முடியைப் பிடித்து இழுக்க தலை நிமிர்ந்தாள். இப்படி பிடிங்க. தலைமுடியை இறுக்கிப் பிடியுங்க. சாவித்திரியின் பின்முடியை இழுத்து, பானுமதி அவள் தலையை மறுபடி நிமிர்த்தினாள். அசையாது இறுக்கிக் கொண்டாள். மறுபடியும் அரைச் சொம்பு ஊற்றப்பட்டது. இம் முறை உப்பு நீர் உள் இறங்கி வேலை செய்தது.

பானுமதிக்கு அழுகை வந்தது. கடவுளே... இது என்ன வேதனை... இந்த அவமானம் உனக்கு ஏன்? இடுப்பு தெரியக் கூட கூச்சப்படுகிற சாவித்திரி இப்படி நிலைகுலைந்து ஆடை கலைந்து கிடக்க வேண்டுமா...

''சாவித்திரி, இதோ ஆச்சுடா. கொஞ்ச நேரம்... சரியாயிடும்''

பத்து நிமிஷப் போராட்டத்துக்குப் பின் டாக்டர் கேட்டார். ''என்ன வயசு இந்தப் பொண்ணுக்கு.''

''இருபத்தியொண்ணு இருக்கும்.''



''ஹெல்தி பாடிதான். சமாளிச்சுக்கும். பல்ஸ் ஓ.கே.''

நர்ஸ், பத்து நிமிஷத்துக்கொரு தடவை பல்ஸ் பாரு. இன்னொரு அரை மணில வந்து பார்க்கறேன். பல்ஸ் குறைஞ்சுதுன்னா உடனே அட்ரோபின் போட்டுடு. என்னைக் கூப்பிடு. அநேகமா தேவை இருக்காது.''

''பரத், ஒண்ணு செய். வசதி உள்ளவங்க தானே...?''

''தெரியலை, மாணிக்கவாசகம்.''

''போலீஸ்காரனை தாஜா பண்ணி பிரைவேட் நர்ஸிங்ஹோம்ல சேர்த்துடு. ஒரு நாலைஞ்சு நாள் ஜாக்கிரதையா கவனிச்சுக்கணும். டிக்ட்வென்டி செமத்தியான விஷம். செத்துடறது நல்லது. உசிரு மீண்டுச்சுன்னாலும் ஸைட் எஃபெக்ட்ஸ் நிறைய இருக்கும். கண்ணு பாதிக்கும். குடல் புண் வரும். தொண்டைல அழற்சி... நரம்பு மண்டல பாதிப்பு... லோ இனிமேதான் கேர்ஃபுல்லா இருக்கணும். அழகான லேடி. ஏதும் தப்பாயிடுச்சுன்னா லைஃப்முழுக்க வேதனைப்பட வேண்டி இருக்கும்.

''நான் பேசறேன், மாணிக்கவாசகம். ரொம்ப நன்றி.''

''அட போடா; இவங்களை விடாதே. இத்தினி கஷ்டப்பட்டதுக்கு அர்த்தம் இல்லாத போயிடும்.''

சகலரும் இன்டென்ஸிவ் கேர் விட்டு வெளியே வந்தார்கள். சாவித்திரியின் உறவு ஜனம் சுற்றிக் கொண்டது. சாவித்திரியின் தற்கொலை தாக்கிய அவமானத்தில் நிலை குலைந்து அலைந்தது.

''பொழச்சுண்டுருவாளா டாக்டர்? என்கிற கேள்வியில் ஏகமாய்க் கவலை வந்தது.

''பூட்டா நல்லதுன்றீங்களா?''

''ஐயோ... நான் அப்படிச் சொல்லலை.''

''உங்க கேள்வி அப்படித்தான் படுது.''

''பகவானே, இப்படி ஒரு பொண்ணைப் பெத்துட்டு நான் இனி என்னென்ன அவமானப்படப் போறேன் தெரியலையே.''

''நர்ஸ் ஒரு ஈ, காக்கா உள்ளே போகக் கூடாது. இவங்க பேசியே பேஷண்டை சாகடிச்சிடுவாங்க. பரத், இன்னிக்கு இங்கே இருக்கட்டும். நாளைக்கு மாத்திக்க வேற ஆஸ்பத்திரிக்கு.''

ஹெச்.எம். தான் பள்ளிக்கூடம் போய் யாராவது ஒரு டீச்சர்





மனைவி: நம்ம பொண்ணுக்குக் கல்யாண ஆசை வந்துடுத்துன்னு நினைக்கிறேன்...

கணவன்: எதனாலே அப்படி நினைக்கிறே?

மனைவி: உங்க சமையல் பிடிக்கலேங்கறா!

— எஸ். ப்ரியதர்சினி.

துணைக்கு அனுப்புகிறேன் என்றான். சாவித்திரியின் குடும்பம் அவமானத்தால் தளர்ந்திருக்கிறது. சரியாய் உதவாது என்று கணக்கு போட்டாள்.

பரத் ஆட்டோ கூட்டிக் கொண்டு வர, ஏறிப் போனாள்.

பானுமதி விடைபெற்றாள் — ''நானும் கிளம்பறேன். தெய்வம் மாதிரி வந்து உதவி செய்தீங்க. நீங்க இல்லேன்னா சாவித்திரி செத்தே போயிருக்கும்...''

''அதெல்லாம் ஒண்ணுமில்லை. நான் இல்லாட்டாலும் கவனிச்சிருப்பாங்க. கூட அரைமணி ஆயிருக்கும். எப்படிப் போகப் போறீங்க?''

''ஆட்டோதான்.''

''நான் டிராப் பண்ணிடவா. தப்பில்லையே மச்சர். பத்து நிமிஷத்துல போயிடலாம்.''

''உங்க வண்டிலயா... ஆட்டோ பெட்டர்.''

மறுபடி ஆட்டோவுக்குக் கை தட்டினான். மாலை நேரம் ஆபீஸ் விடும் பொழுது. ஆட்டோ கிடைப்பது சிரமம். ஆட்களோடு வலதும் இடதும் போயின.

''எதுனா ட்ராப் பண்ண வரும். நான் போயிக்கறேன்.''

''எப்படி மச்சர்?'' மறுபடி வலதும் இடதுமாய் ஆட்டோவுக்கு ஓடினான்.

''புரசைவாக்கம் வர்றியா?''

''கூட ரெண்டு ரூபா போட்டுத் தர்றியா''

''எதுக்குய்யா... எதுக்கு.. வாங்க மச்சர்.''

''பரத், சண்டை வேணாம். மோட்டார் சைக்கிள்லயே போயிடலாம்.''

மோட்டார் சைக்கிள் உதைத்துத் திரும்பி நிறுத்தினான். பின் சக்கரத்தருகே உள்ள கால் வைக்கும் பிடிமானத்தை இறக்கி வைத்தான். பானுமதி பின்னால் உட்கார்ந்து கொண்டாள். பின்பக்க வளையம் பிடித்துக் கொண்டாள். வண்டி திரும்ப அவன் தோளை அவள் அறியாமல் இறுக்கிக் கொண்டாள்.

பாவம். எதற்கு இவனுக்கு இத்தனை கஷ்டம். இவன் வராது போனால் ஆஸ்பத்திரி சுவர்களில் முட்டி முட்டி அலைந்திருக்க வேண்டும். டாக்டர் வாடா போடா சிநேகிதம் போலிருக்கிறது. தட்டி எழுப்பினதிலிருந்து நன்றி சொன்னவரை ஏக வசனம் தான் இரண்டு பேர் பேச்சும். ''யாரு, உன் ஆளா..'' எடுத்தவுடனே அந்த டாக்டர் கேட்டான். அவனும் சின்னப் பையன் தான். பரத்துக்கு எத்தனை வயசு இருக்கும். இருபத்தி ஏழு, இருபத்தி எட்டு. வலிப்பு வந்த அந்தக் குழந்தை இரண்டு நிமிடத் துடிப்பில் செத்துப் போய் விட்டது. அப்பா! கண்ணெதிரே உடம்பு எகிறி, எகிறி, வாய் வழியே உயிர் போய் விட்டது. பெத்தவளுக்குத் தெரியவேயில்லை. செத்த பிறகு சாதாரணமாய்ச் சொல்கிறார்கள். இப்போது இத்தனை வேகமாய் சால்ட் வாட்டர் ட்ரீட்மெண்ட் தரவில்லையெனில் சாவித்திரியும் செத்துப் போயிருப்பாள். டாக்டர் மாணிக்கவாசகத்தை நாளை மறுமுறை சந்தித்து நன்றி சொல்ல வேண்டும். ஆஸ்பத்திரி மாத்த முடியுமா என்று கேட்கலாமா. சாவித்திரி உறவுகள் வேறு ஆஸ்பத்திரிக்குப் போக அனுமதிக்குமா.. என்னவென்று கூப்பிடுவது இவனை.. தம்பி என்றா.. பரத் என்றா.. ஏங்க என்றா.. பரத் என்று இரண்டு மூன்று முறை கூப்பிட்டு விட்டோம். தொடர்ந்து அப்படியே கூப்பிடலாம்.

''ஆஸ்பத்திரி மாத்தறது நல்லதுன்னு நினைக்கறீங்களா?'' பொதுவாய் அவனைக் கேட்டாள்.

''நிச்சயமா! இந்த மாதிரி போலீஸ் கேஸ் சிடில இரண்டு மூணு ஹாஸ்பிட்டல்ல அட்மிட் பண்ணிக்கிறாங்க. ஆனா சார்ஜ் ஒரு நாளைக்கு இருநூறு முன்னூறு ஆயிடும். அந்த மச்சர் வீட்ல கன்ஸல்ட் பண்ண வேணாமா!''

''நான் நைட்ல போய் ஒரு தடவை பேசிப் பார்க்கறேன்.''

''அப்ப இன்னிக்கு ட்யூஷன் வேணாமா?''

''வேணாம். நாளைக்கு வரச் சொல்லுங்க. என்னைத் தெரு முனைல இறக்கி விட்டுருங்க.''

''சரி. இறங்கறப்ப என் கார்ட் தரேன். எனக்கு ஃபோன் பண்ணுங்க. எப்ப வேணாலும், எது வேணாலும் சொல்லுங்க. ஆமா, இந்த மச்சர் ஏன் தற்கொலை அட்டெம்ப்ட் பண்ணாங்க?''

''ஏதோ காதல் தோல்வி...''

''காதல்ல எப்படி தோல்வி வரும்?''

''லவ் பண்ணவரு கை விட்டுட்டா தோல்விதானே?''

''வேற யாரையாவது லவ் பண்றது.''

''அவ்வளவு சுலபமா?''

''வாழத் தெரியலைங்க. நிறைய லேடீஸுக்கு வாழறது எப்படின்னே தெரியலை. சாகறது சுலபம், மச்சர். வாழறதுதான்

# தன்னம்பிக்கை



□ ஒவ்வொரு மனிதனும் முதலில் தன்னிடம் நம்பிக்கை வைக்க வேண்டும். என்னால் முடியாது என்று ஒரு போதும் சொல்லாதீர்கள். நீங்கள் வரம்பில்லா வலிமை பெற்றவர்கள் எதையும், எல்லாவற்றையும் சாதிக்கும் ஆற்றல் படைத்தவர்கள் நீங்கள்.

□ மனித வரலாற்றை முழுவதும் பார்க்கும்போது ஆணோ, பெண்ணோ வரலாற்றில் சிறப்புடன் விளங்கினார்கள் என்றால் அதற்கு முக்கியக் காரணம் அவர்களது தன்னம்பிக்கை தான் என்று சுவாமி விவேகானந்தர் வீர முழக்கமிடுகிறார்.

ஆனால்.. நம்மில் பலர் ஓரளவு கல்வித்தகுதியிருந்தும் மற்றவர்களிடம் ஆங்கிலத்தில் பேசத்தயங்குகிறோம்.

தவறாகப் பேசிவிடுவோமோ என்ற பயமும், ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மையுமே இத்தயக்கத்திற்கான மூல காரணமாகும்.

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் அளிக்கும் ஓர் எளிய பயிற்சி முறையை மேற்கொண்டால், தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாக உரையாடவும், இலக்கணப் பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுதவும் உங்களால் முடியும்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இப் பயிற்சியை மேற் கொள்ளலாம். நேர்முகப் பயிற்சியும் உண்டு. இன்றே கீழ்கண்ட முகவரியில் தொடர்பு கொண்டு பயன் பெறுங்கள்.

NAGA

## விவேகானந்தா கல்வி நிலையம்

தபால் பெட்டி எண் 4986. 9, மேட்லி ரோடு, தி.நகர். சென்னை.600 017.

கஷ்டம். எது சுலபமோ அதைச் செய்துட றாங்க.''

''உங்களுக்குப் புரியலை பரத்.''

''நிச்சயமா புரியலை, மச்சர். எதிர்த்து நிக்கறதுக்கு நம்ம லேடீஸுக்கு ஏன் யாரும் கத்துக் கொடுக்கலைன்னு தெரியலை.''

''இவ கேஸ் வேற. அந்த ஆள் ஏற் கெனவே கல்யாணம் ஆனவரு.''

''நிம்மதி! தலை முழுகிட்டுப் பள்ளிக் கூடம் போக வேண்டியதுதானே.''

''கிட்டத்தட்ட தலைமுழுகிட்டா. அந்த ஆள் ஏதோ சாப்பிட்டு எங்கேயோ அட்மிட் ஆயிட்டாருன்னு கேள்விப்பட்டு...''

''இந்த அம்மாவும் சாப்பிட்டாங்களாக் கும். அப்பத்தானே காதல் அமரத்துவம் அடையும். இடியட்.''

''யாரு?''

''உங்க மச்சர்தான்.''

''சாவித்திரி வயசுல சின்னவ...''

''இல்லீங்க. நாப்பது வயசுல கூட அந்தம்மா இப்படித்தான் இருப்பாங்க.''

''லேடீஸ் எப்படி இருக்கணும்கறீங்க?''

''துக்கம் நிரந்தரம். ஒண்ணு மாத்தி ஒண்ணு தினம் வந்து முகத்துல இடிக்கும். பழக்கப்படுத்திக்கணும். பத்து வயசுல ஆரம்பிச்சு இருபது வயசுக்குள்ள துக்கத் தோட நல்லாப் பழகிடணும். வலியப் போய்க் கூட உதை வாங்கலாம். அவமா னப்படலாம். அப்படிப்பட்டுட்டோம், இருபது வயசுக்கப்புறம் தெளிவா ஆயிடும். அவமானத்துக்குப் பயந்து, ஒதுங்கி ஒதுங் கிப் போனா ஒருநாள் இல்லை ஒருநாள் சின்ன அவமானம் கூடப் பெரிய இடியா தலையில் இறங்கி, சுதற வுட்டுரும்.''

''புதுசா இருக்கு உங்க ஃபிலாஸபி.''

''ஏதோ எனக்குத் தெரிஞ்சதைச் சொன் னேன்.''

''ஜெண்ட்ஸுக்குத் தெரியும். லேடீ ஸுக்குச் சரியா வராது...''

''இதுல ஜெண்ட்ஸ் லேடீஸ் எப்படிங்க?''

''உண்டுங்க. சாவித்திரி அப்பா என்ன சொன்னார்.. பார்த்தீங்களா? தீராத அவமானத்தை இப்படிக் கொடுத்துட்டா ளேன்னு புலம்பறாரு. பொண்ணுக்கு அவமானம் அவளோட மட்டும் போகலை. அவ வீட்டையும் தாக்கும். சாவித்திரியை விட அவங்க வீட்லதான் இது பெரிய விஷய மாப் பேசப்படும். இதுக்கு அவ செத்துத் தொலைஞ்சிருக்கலாம்னு கூட நினைக்கத் தோணும்.''

''அப்படி நினைக்கிற வீட்டை உதறிட ணுங்க.''

''உங்க வீட்டுப் பொண்ணுக்கு இப்படி ஆச்சுன்னா இதே பேச்சுத்தானா?''

''பதினேழு வயசுக்கு ஒன்பதாவது படிக் கிற ஒரு இரண்டுங்கெட்டானை எங்க வீட்ல வச்சுக்கிட்டிருக்கேன். அதை அவமானமா நான் நினைக்கல. அது ஒரு உயிர். அது ஒரு பிறவி. என்னால முடிஞ்ச வரைக்கும் அதுக்கு உதவி செய்வேனே தவிர இது வேண்டாம்னு தூக்கி எறிய மாட்டேன். அவளை ஏமாத்தி எவன்கிட்டயாவது கொடுக்க மாட்டேன். படிப்பு வராது படிப்பு வராதுன்னு அழும். இல்லை உனக்கு வரும். முடிஞ்சவரை படின்னு சொல்றேன்.''

''எல்லாரும் அப்படியில்லீங்க.''

''புரியுது. லேடீஸ்தான் மாத்தணும். டிக்ட்வென்டி குடிக்காத சண்டை போட ணும்.''

''சண்டை போட்டதுக்கும்தான் கேலி பண்றாங்க.''

''உங்களைப் பத்திச் சொல்றீங்களா, மச்சர்?''

பானுமதி திகைத்தாள்.

''என்னைப் பத்தித் தெரியுமா உங் களுக்கு?''

''இப்பத்தான் மாணிக்கவாசகம் சொன் னான், இன்டென்ஸிவ் கேர் ரூம்ல.''

''யாரு?''

''டாக்டர்.''

''என்னன்னு?''

''அவங்க வீட்டுக்கு வருவீங்களாமே... அவங்க அண்ணன்தான் உங்க கேஸ் நடத்தி னாராமே?''

பானுமதிக்குச் சங்கடமாய் இருந்தது. தெரு முனையில் வண்டி நின்றது.

''வேணும்ங்கற போது எனக்கு ஃபோன் பண்ணுங்க மச்சர். ஆஸ்பத்திரி மாத்தறதா இருந்தா மாத்திடலாம். கேட்டுச் சொல் லுங்க. நான் வரேன்.''

வண்டி திரும்பி புகையூதி நகர்ந்தது.

மெல்லிய பெட்ரோல் வாசனை சூழ்ந்து கொண்டது. பானுமதிக்கு அந்த வாசனை பிடித்திருந்தது.

(தொடரும்)



மார்டோன் டௌனி சிறந்த கவிஞர். அவருடைய ரசிகர் ஒருவர் தாமும் கவிதை எழுத ஆசைப்பட்டு, ''நான் ஏன் வாழ்கிறேன்?'' என்ற தலைப்பில் எழுதி, டௌனிக்கு அனுப்பி, அபிப்பிராயம் கேட்டார்.

டௌனியிடமிருந்து அது அவருக்குத் திரும்பி வந்தது, ஒரு குறிப்புடன்:

''நீ உன் கவிதையைத் தபாலில் அனுப்பியதால்!''

ஆதாரம்: எக்ஸ்பிரஸ்

தகவல்: எல். வேங்கடேஷ்.



# ஐடிபிஐ-முதலீட்டுப் பத்திரங்கள் முதலீட்டு ஆதாய வரி விலக்குப் பெற ஒரு கவர்ந்திடும் வழி



- ஆண்டு முழுவதும் சமவிலையில் கிடைக்கும்.
- வருமான வரிச் சட்டம், 1961, பிரிவு எண் 54E-ன் கீழ் முதலீட்டு ஆதாய வரி விலக்கு.
- செல்வ வரிச் சட்டம், 1957, பிரிவு எண் 5(1)xvie)-ன் கீழ் செல்வ வரி விலக்கு.
- வருமான வரிச் சட்டம், பிரிவு எண் 80-Lன் கீழ் வருமான வரி குறைப்பு.
- ஆண்டொன்றுக்கு 9% விகிதத்தில் ஆறு மாதத்திற்கொரு முறை வட்டி வழங்கப்படும்.
- முதலீடு செய்தவர் விரும்பினால் 3 ஆண்டுகட்கான மொத்த வட்டியும் தள்ளுபடி முறையில் முன்னதாகவே ஒரே நேரத்தில் வழங்கப்படும்.
- எவ்வித வரியும் வட்டி வழங்கும்பொழுது கழிக்கப்படமாட்டாது.
- வெளியூர்க் காசோலைகள் ஏற்றுக்கொள்ளப்பட்டு, அவற்றை மாற்றுவதற்கான செலவை ஐடிபிஐ ஏற்றுக்கொள்ளும்.

Sabhagya-B/89 TAM



மேற்கொண்டு விவரங்களுக்கு அருகாமையிலுள்ள ஐடிபிஐ ஆபிஸை அணுகுங்கள் அல்லது மானேஜருக்கு எழுதுங்கள்:

**இண்டஸ்ட்ரியல் டெவலப்மெண்ட் பாங்க் ஆப் இந்தியா**

ஐடிபிஐ டவர், கஃப் பரேட், கொலாபா, பம்பாய்-400 005.

அடுத்த நூற்றாண்டு:

15

# அடுத்த தலைமுறை கம்ப்யூட்டர் மனிதமொழி பேசும்!




5.11.89 இதழில் கொடுக்கப்பட்ட சுலபமான போட்டிக்கு விடை கண்டுபிடிப்பதில் (பழங்களின் மதிப்பு 3, 2) உங்களுக்குச் சிரமமிருந்திருக்காது. எத்தனை விரைவில் கண்டுபிடித்தீர்கள் என்பதுதான் முக்கியம்.

ஜெர்மனியில் அவர்கள் செய்தித் தொடர்பு ஐஎஸ்டிஎன் என்கிற பாதையில் சென்று கொண்டிருக்கிறார்கள். ஒரே இணைப்பின் மூலம் பல்வகைச் செய்திகளைக் கடத்திச் செல்லும் சாகசங்களை ம்யூனிக் கம்ப்யூட்டர் திருவிழாவில் பார்த்தேன். கொரியாவைச் சேர்ந்தவர்கள் மேல் நாடு செய்வதை அப்படியே அச்சடித்தாற் போல் செய்து காட்டுவதையும் சென்ற வாரத்தில் சொன்னதை மறுபடி சொல்ல விரும்பவில்லை. கொரியா, ஜப்பான், தாய்வான் என் சிங்கப்பூர், ஹாங்காங், மலேசியா போன்ற நாடுகள் எல்லாம் சில்லு இயலில் ரொம்பவும் முன்னேற்றம் கண்டிருந்தாலும், ஜப்பானைத் தவிர மற்ற அனைத்தும், விலை அதிகமாகிறது என்று மேல் நாட்டவர்கள் தத்தம் டெக்னாலஜிகளை இந்த நாடுகளில் விதைத்து, லேபர் குறைந்த விலையில் உற்பத்தி செய்து, தம் நாடுகளுக்கே எடுத்துச் சென்று பயன்படுத்திக் கொள்கிறார்கள். இதனால் மலேசியா, சிங்கப்பூர் எல்லாம் எலக்ட்ரானிக்ஸ் இயலில் முன்னேற்றம் அடைந்துவிட்டன என்று உத்தரவாதமாகச் சொல்ல முடியாது.

உதாரணத்துக்குச் சிங்கப்பூரில் எச் பி என்கிற அமெரிக்கக் கம்பெனி 'லேசர்ஜெட்' ப்ரிண்டர் இயந்திரம் பண்ணுகிறது. அதிவேகத்தில், அச்சடித்தாற்போல் எழுதக்கூடிய இயந்திரம். ஒரு நாளைக்கு நூறு பண்ணுகிறது! இதன் வடிவமைப்பு எல்லாம் அமெரிக்காவிலிருந்து வந்தது. சிங்கப்பூரில் செய்தால் லாபம் என்று அங்கே செய்து, கொண்டுபோகிறார்கள். அதனால் சிங்கப்பூர் தீவுக்குப் பொருளாதார சுபிட்சமே தவிர உண்மையில் டெக்னாலஜி அவர்களுடையதல்ல.

இவ்வகையில் சிங்கப்பூர், ஹாங்காங் போன்ற தேசங்களில் அரசு தாராளமாக மற்ற நாடுகளுக்கு அனுமதி தந்ததால் இந்த நிலை. இந்தியாவிலும் இந்த மாதிரி மேல்

சுஜாதா



◀ இன்றைய நாட்களில் கம்ப்யூட்டருக்கும் மனிதனுக்கும் முக்கிய தொடர்பு 'மௌஸ்' (Mouse) என்னும் இந்தச் சாதனம் மூலம்.

நாட்டு டெக்னாலஜி வந்திருக்க முடியும். ஏறக்குறைய டெலிவிஷன் துறையில் அப்படித்தான் ஆகியிருக்கிறது. பம்பாய் ஸான்டாக்ரூஸ் பிரதேசத்தில் எக்ஸ்போர்ட் ப்ரோமோஷன் ஸோன் என்று வைத்து, இம்மாதிரி பண்ணிக் கொண்டிருந்தாலும் உள்நாட்டுத் தொழில் நுட்பம் கொரியா தாய்வான் போல வளராததற்குக் காரணம் நம் அரசாங்கக் கொள்கைதான். அதைப் பற்றி இந்தத் தேர்தல் வேளையில் பேச வேண்டாம்.

**ஜ**ப்பானியர்கள் வேறு இனம். அவர்களால் அமெரிக்க புத்திசாலித்தனத்துக்கும் டெக்னாலஜிக்கும் ஈடு கொடுத்து அதைவிட ஒரு படி மேலே போகவே முடியும் என்பதற்கு உதாரணம் — அவர்களது ஐந்தாம் தலைமுறை கம்ப்யூட்டர் திட்டம். அவர்கள் அறிவு என்பதை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்கள். அதற்காக ஒரு 'நாலெட்ஜ் இன்ஜினியரிங்' கம்ப்யூட்டர் தயாரித்துக் கொண்டிருக்கிறார்கள். எக்ஸ்பர்ட் ஸிஸ்டம் என்பது தனிப்பட்ட துறைகளின் அறிவுத் தொகுப்பு. டாக்டர், இன்ஜினியர், வழக்கறிஞர் என்று அவரவர் துறை அறிவு. அதன்பின் மனித மொழிகளிலேயே உரையாடல், கோபால் பேசிக் என்றில்லாமல் தமிழ் தெலுங்கு என்று.... அப்புறம் வரை திறன். க்ராஃபிக்ஸ் என்கிறார்கள் இதை. அதன்பின் ரோபாட்டுகளின் இயக்கம்; இவைதான் ஜப்பானிய அடுத்த நூற்றாண்டு கம்ப்யூட்டர்களின் குறிக்கோள்.

இதற்கான டெக்னாலஜி எவ்வகையில் இருக்கும் என்பதைப் பார்க்கலாம்.

இக்காலத்துக் கம்ப்யூட்டர்கள் எல்லாமே டேட்டா ப்ராஸஸிங் என்கிற காரியத்தைத் தான் செய்து கொண்டிருக்கின்றன. டேட்டா என்பது வெறும் எண் எழுத்துக்கள். வருங்கால ஐந்தாம் தலைமுறை கம்ப்யூட்டர்கள், இன்ஃபர்மேஷன் ப்ராஸஸிங் செய்யப் போகின்றன. இன்ஃபர்மேஷன் என்பது அர்த்தமுள்ள செய்தி. இந்தக் காலத்துக் கம்ப்யூட்டருக்குத் தமிழ் என்று சொன்னால் அது த மி ழ் என்று மூன்று எழுத்துக்கள். வருங்கால கம்ப்யூட்டர்களுக்குத் தமிழ் என்று சொன்னால், உடனே அது ஒரு மொழிவகை. கி.பி. முதல் நூற்றாண்டிலேயே இதற்கு இலக்கியம் இருக்கிறது. இது ஐந்து கோடிக்கும் மேற்பட்ட மக்களால் பேசப்பட்டு வருகிறது. போன்ற அத்தனை செய்திகளையும் உள்ளடங்கிய அறிவு.

இதைத்தான் இன்ஃபர்மேஷன் ப்ராஸஸிங் என்கிறார்கள்.

**வ**ரப்போகும் பாராவை ஒரு க்ளாஸ் குளிர்ந்த நீர் அருந்தி ரேடியோ டீ.வி. எல்லாம் அணைத்துவிட்டுப் படித்துப் பாருங்கள்....

அறிவின் அடிப்படையில் அமைந்த விரிவான செய்திகளிலிருந்து தகவலைத் தொடர்ந்த வகையில் தேர்ந்தெடுத்து, அறிவிலிருந்து. இக்காலக் கம்ப்யூட்டர்கள் கணக்கு போடுவது போல், வருங்கால கம்ப்யூட்டர்கள் யூகங்கள் செய்து மனித மொழியில் மனிதர்களுடன் உரையாடவல்ல இயந்திரங்களாய் இருக்கும்! இவ்வியந்திரங்களின் ஆதார வடிவமைப்பைப் படத்தில் பார்க்கலாம்.

இந்த அமைப்பில் மூன்று பகுதிகளை நீங்கள் பார்க்கலாம். அதனுள் இருக்கும் அறிவாலயத்தை மேற்பார்க்கும் பகுதி; இரண்டாவது, அறிவாலயத்திலிருந்து வரும் தகவலை, தேவைப்பட்ட பகுதிகளை மட்டும் எடுத்துக் கொண்டு, அதன் மூலம் கொடுத்த பிரச்னை என்ன என்பதை யூகித்துத் தொகுத்து விடை காணும் பகுதி. மூன்றாவது, வெளிப்புற மனிதர்களுடன் இயற்கையான மொழிகளில் உரையாடும் எழுதும் காட்டும் பகுதி. அறிவாலயத்தில் இருக்கும் அறிவு என்பதைக் கம்ப்யூட்டருக்குத் தகுதியாகச் சொல்ல வேண்டும். இக்காலக் கம்ப்யூட்டர்களுக்கும் வருங்காலக் கம்ப்யூட்டர்களுக்கும் ஞாபக அறைகள், மெமரி என்று சொல்வது அதே சிலிக்கன் சில்லுதான். அந்தச் சில்லுகளில் எப்படிச் சீர்ப்படுத்தி எந்த வரிசையில் எழுதுகிறார்கள் என்பதில்தான் வேறுபாடு இருக்கும். கம்ப்யூட்டரின் ஞாபகத்தில் தனித் தனியான பொருட்களாகச் சேர்த்து வைக்காமல் பொருட்களுக்கு இடையில் இருக்கும் உறவுகளையும் சேகரித்து வைப்பார்கள். உதாரணத்துக்குத் தமிழ் என்றால் தமிழ் என்பது ஒரு மொழி என்கிற அந்த உறவையும் சங்கேத முறையில் எழுதிக் கொள்வார்கள்.

அதே போல், மொழி என்கிற செய்தித் துணுக்குடன் அதற்கு எழுத்துக்கள் உண்டு, அது மக்களால் பேசப்படும், என்கிற உறவுகளையும் குறித்து வைத்திருப்பார்கள். கம்ப்யூட்டர் தமிழ் என்கிற வார்த்தையை அணுகும் போது அதனுடன் உள்ள தொடர்புகள் அனைத்தையும் அலசி, தமிழ் பேசப்படும் என்கிற முடிவுக்கு வரும். அதைத்தான் இன்ஃபரன்ஸ் என்பார்கள்.

ரொம்ப அடர்த்தியாகிவிட்டதல்லவா? அதனால் இந்த வாரம் ஒரு ஜோக். என் தம்பி ராஜகோபாலன் சபயம்:

ஒரு மந்திரி நவீனமான எலெக்ட்ரானிக் டெலிபோன் எக்ஸ்சேஞ்சுக்கு விஜயம் செய்தார். அங்கிருந்த இன்ஜினியர் மிகவும் ஆர்வத்துடன் அவருக்கு எக்ஸ்சேஞ்சின் எல்லா நுட்பங்களையும் விவரித்தார். எப்படி முன்பெல்லாம் ரிலே, க்ராஸ் பார் என்று இருந்தது. இன்று சப்தமே இல்லாத எலெக்ட்ரானிக் ஐஸி வித்தைகளாக மாறிவிட்டது என்பதையெல்லாம் விவரித்தார். கடைசியில், "ஐயா, உங்களுக்கு ஏதாவது சந்தேகம் இருக்கிறதா?" என்றார்.

மந்திரி, "ஆம். எல்லாவற்றையும் விவரித்தாய். அந்த இயந்திரம் என்னவென்று சொல்லவில்லையே?" என்றார். அவர் காட்டிய இயந்திரத்தைப் பார்த்து இன்ஜினியர் ஏமாற்றத்துடன் "அது வாட்டர் கூலர் ஸார்!" என்றார்.

(தொடரும்)



எல்லாமே இழந்து விட்டோம் என்று தோன்றும் போது ஒன்றை மறவாதீர்கள் — அது எதிர்காலம் என்று ஒன்று இன்னமும் இருப்பதுதான்!

— கிளென்டன்.

— சுகராஜ்.




திசை மாறிப் போன தமிழ் கீதாவை இனம் காட்டிய அளவில் பாலசந்தருக்கு நன்றி சொல்ல வேண்டும். அப்பழுக்குச் சொல்ல முடியாத பொஸஸிவ் காரெக்டர். மேடையில் கணவன் பக்கத்தில் அமர்ந்து குயிலி கொஞ்சிப் பேசுவதைக் காணச் சகிக்காமல் புயல் வேகமாய் வெளியேறுகிற மிடுக்கு. கணவன் வீடு திரும்பி சமாதானப் படுத்த அதற்கு மசியாத அந்தக் கட்டம்; அந்த ஊடலில் ஆடிப் போய் வீழ்ந்த கணவனை 'என்ன கோபம்? ஏன் மூஞ்சி உம்முன்னு இருக்கு?' என்று மேல் விழுந்து மூக்கைத் திருகி, கன்னத்தை இழுத்து, காதைக் கடித்து... அந்த ராட்சதக் கொஞ்சல்! மிகை என்று நினைப்பவர்கள் பொஸஸிவ் காரெக்டர் பற்றி அறியாதவர்களாகத் தான் இருக்க வேண்டும்!

ரகு — மானாகத்தான் துள்ளியிருக்கிறார். மீசை வைத்ததும் சும்மா சொல்லக் கூடாது. அந்தஸ்து கூடி விட்டது. அளவுக்கு அதிகமாய்த் தன்னை அடக்கி வைக்கப் பார்க்கும் மனைவியிடம் என்னதான் ஆத்திரம் ஏற்பட்டாலும் அதை ஜீரணம் பண்ணிக் கொள்ள முயலும் இடங்களில் அனுதாபத்தைப் பெறுகிறார். அதன் மூலம் அவளைப் பிரிந்து காணாமல் போவதை நியாயப்படுத்தியிருக்கிறார்.

ஜனகராஜே! உன் பேர் சுறுசுறுப்பா! கார் ஓட்டிக் கொண்டே கையாள் உதவியுடன் பல்லுக்கு பிரஷ் செருகுவதிலிருந்து கழுவி முடித்து உடை மாற்றம் செய்வது வரை, அடேங்கப்பா, எத்தனை பரபர! ஜாலி என்பது காரணப் பேராம். இனத்துக்கு ஒரு கல்யாணம் என்றாலும் கடைசியாய் செட்டப் செய்த சர்வர் லலிதகுமாரி, வலிப்பு வந்து விழுந்ததும் அந்த முகத்தில் தேக்கிய பரிதாப பாவம், கையாளிடம், 'இனிமே இவதாண்டா உனக்குப் பர்மனண்ட் அண்ணி', என்று சொல்லும் உறுதி — ஜனகு, நீ எங்கியோ போயிட்டேபா.

அந்தக் காக்கினாடா காஞ்சனம்மகாரு — ஜெயசித்ரா தூள். திடீர் பணக்காரத் திமிர் என்றால் எப்படி? கூப்பிட்ட குரலுக்கு வேலைக்காரி மகள் — காலேஜில் படிக்கிறவளாம் — எட்டிப் பார்க்காமல் தலைவாரிக் கொண்டிருக்கக் கண்டு சாவகாசமாய் அருகில் சென்று, பதற்றமில்லாமல் கூந்தலைக் கத்தரித்துப் போட, பதறிக் கொண்டு வந்த தாயிடம், 'உன் பொண்ணுக்குக் காலேஜ் பீஸ் கட்டணும்னு கேட்டே இல்லே? தீசுக்கோ,' என்று பணத்தைத் திணித்து விட்டுப் போகும் திமிர். பாலசந்தரா கொக்கா?

பிற்பகுதியின் தொய்வை மறக்கடிப்பது புதுமுகம் சித்தாராவின் தெற்றுப் பல் சிரிப்பு.

கோவாவிலே (அற்புத லொகேஷன்ஸ்!) ஒரு குட்டி பங்களாவில் வாழும் ஆதர்ச ஜானி தம்பதி — பூர்ணம் விஸ்வநாதன், சௌகார் ஜானகி படுபாந்தம்! பா படம் என்றால் ஒரு செண்டிமெண்ட் திருப்பம் வேண்டாமோ? 'அமலாவுக்கு முத்தம்' என்ற விளையாட்டு வினையாக முடிகிற போது அவர்களுக்குக் காவிய அந்தஸ்து அளித்து விட்டார்.

'நோ ப்ராப்ளம் சார்' என்று வரும் மிமிக்ரி செகரட்டரி, 'வருங்கால முதல்வர்' என்று வாய்க்கு வாய் சொல்லிக் கொள்ளும் மரியாதை ராமன் கலகலப்பூட்டியிருக்கிறார்கள்.

கிரிக்கெட் ஸ்போர்ட்ஸ்மனாய் வந்து அந்தப் பிரிவினருக்கே அவமானச் சின்னமான காரெக்டரில் கால் பதித்திருக்கும் அந்த வாட்டசாட்டப் புதுமுகம் போஸ் கொடுத்திருக்கிறார்.

மன்னிக்கணும் டைரக்டர் சார், புருஷனுடன் தூசு ஒட்டுவதைக் கூட விட்டுக் கொடுக்காத அந்த நாயகி, அவனை ஏதோ பழி தீர்க்கும் வெறி கொண்டு, இந்த விளையாட்டு வீரனிடம் போய், 'என்னைக் காப்பாத்துவீங்களா? என்னைக் கல்யாணம் பண்ணிக்குவீங்களா?' என்று மூஞ்சிக்கு நேரே கெஞ்சுவானோ? என்னமோ சராசரி பார்வையாளருக்கு இது உதைக்குது சார்! ('உங்களுக்காக நான் படம் எடுக்கலே', என்று நீங்க சொல்லலாம். அது வேற விஷயம்.)

'இத்தனை படம் பண்ணிட்டார் பாலசந்தர். இன்னும் ஒரு வித்தியாசமான முடிவைத் தரணும்கிற தில் வரலையே!' என்று இரண்டு கடிதார்கள் விமரிசித்துக் கொண்டு செல்லக் கேட்டோம். பாலசந்தரின் பலமும் அதுதான்; பலவீனமும் அதுதான் என்று பதில் சொல்ல வேண்டும் போலிருந்தது.

— பி. எஸ். எஸ்.

# ஏழாவது இரவு

4

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்:

மோட்டார் சைக்கிளில் அவன், பின் ஆசனத்தில் அவள்... விரைந்து சென்ற அந்த வண்டியையே பார்த்துக் கொண்டு நின்றிருந்த இன்ஸ்பெக்டர் முரளி பெருமூச்சு விட்டார். அடர்ந்த மேகமாக யோசனைகள் நெஞ்சில் படர, மெள்ளத் திரும்பினார். நிதானமாக நடந்து தம் இருக்கையை அடைந்தார்.

உட்கார்ந்து, மேசை மீது இருந்த டெலிபோனையே ஒருகணம் உற்றுப் பார்த்தார். யோசனையின் தீவிரத்தில் பார்வை நிலை குத்தி நின்றிருந்தது. ஒற்றைவிரல் மேசை மீது தாளமிட, மனம் கூட்டிக் கழித்துக் கொண்டிருந்தது.

'அந்தப் பெண் ரஞ்சனா... அவள் எப்படி அந்த முடிவுக்கு வந்தாள்? வசுமதியின் மரணம் ஒரு விபத்து அல்ல என்று எப்படி அவளால் உறுதியாகக் கூற முடிந்தது?'

சட்டென்று போனை எடுத்து எண்களைச் சுழற்றினார். மறுமுனை, ''ஹலோ...'' என்றதும் —










அதே நேரத்தில் டிரைவ் இன் ஓட்டலில் —

ரமேஷின் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள் ரஞ்சனா.

இழுத்த இழுப்புக்கு வருகிறான் இவன்... மறுபேச்சுப் பேசாமல், எதிர்க்கேள்வி கேட்காமல், ரொம்பவும் சுலபமாக... இதை வெகுளித்தனம், என்று எடுத்துக் கொள்வதா? அல்லது... அல்லது...

தடுமாறினாள்.

புதிய இடம், புதிய மனிதர்கள். யாரை நம்புவது, யாரைச் சந்தேகப்படுவது என்பது புரியாத சூழ்நிலை. முரட்டுத்தனமான (சமயங்களில் 'குருட்டுத்தனமான' என்று கூட அவளுக்குத் தோன்றியது) ஒரு நம்பிக்கையில் இந்தக் காரியத்தில் இறங்கிய பிறகு, சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்தாள்.

எனவே, இவனிடம் மனம் திறந்து பேசுவதற்குத் தயக்கமாகவே இருந்தது.

யோசித்தாள்.

அவனே தொடர்ந்து பேசினான்.














பேச்சைச் சட்டென்று நிறுத்திக் குரல் வந்த திக்கில் ரஞ்சனா திரும்பிப் பார்த்த போது —

சிநேகமாகச் சிரித்தவாறு அவர்களை நெருங்கினாள் அவள்.

பார்த்த தோற்றத்தில் கல்லூரி மாணவி என்பது தெரிந்தது. அருகில் நெருங்கியவள் ரஞ்சனாவை உற்றுப் பார்த்துத் திகைத்தாள்.

"நீ... நீ..."

'ஆம்' என்பது போலக் கண்களை மூடித் திறந்தாள் ரஞ்சனா.

சட்டென்று அவள் கையைப் பற்றி இழுத்த அந்தப் பெண், "உன்னோடு தனியாப் பேசணும்," என்று கூறி ரஞ்சனாவை அழைத்துக் கொண்டு போய்விட —

திகைத்துப் போய் நாற்காலியில் சாய்ந்தான் ரமேஷ்.

— தொடரும்



# டி.ராஜேந்தர் தனிக்கட்சி தொடங்கியது பற்றி..?

* தனிக் கட்சி...

* கே. எஸ். மனோகரன், கள்ளியம்புதூர்.

? **மு. க. ஸ்டாலின் எம். எல். ஏ. பதவியை ராஜினாமா செய்யப் போகிறாராமே?**

! இப்போதுதான் அவரைப் பற்றிய ஒரு வதந்தி ஓய்ந்தது. (நன்றி: குமுதம்) அதற்குள் இன்னொன்றா? இரண்டு வதந்திகளுக்கு இடையில் இடைவெளி தேவையில்லை போலும்!

* மேலை பழ. நாகப்பன், சென்னை.

? **எதிர்க்கட்சித் தலைவர் சம்பளமோ, சலுகைகளோ பெறவில்லையாமே?**

! இது ஒரு பெருமையா? கடமைகளைத் திறம்படச் செய்து உரிமைகளைப் பெறுவது தான் பெருமை. இது தியாகமல்ல; வாக்காளருக்கு இழைக்கப்படும் துரோகம்.

* கே. ஆர். தேவேந்திரன், வேலூர்.,

? **'தமிழகத்தில் மழை பெய்யவில்லை என்றால் கூட மத்திய அரசுதான் மேகத்தை அனுப்பவில்லை என்று தி. மு. க. வினர் காரணம் கூறுவார்கள்' என்று அமைச்சர் ப. சிதம்பரம் பேசியிருப்பது பற்றி?**

! இயற்கை வாயு இணைப்புத் திட்டம்; உதகமண்டல கலர் ஃபிலிம் திட்டம்; சென்னைப் பெருநகர் அபிவிருத்தித் திட்டம்; தமிழக மேல்சபை புனர் அமைப்புத் திட்டம்; சேது சமுத்திரம் திட்டம், சென்னை நகர துரிதப் போக்குவரத்துத் திட்டம், திண்டுக்கல் தூத்துக்குடி அகல ரயில்பாதை... என்று மத்திய அரசு திட்ட மேகங்களைத்தான் அனுப்புகிறது; அமலாக்கம் என்ற மழை பொழியக் காணோம் என்றுதான் சுட்டிக் காட்டுகிறார் கருணாநிதி.

* டி. சீனிவாசன், சென்னை.

? **'பொது நல நோக்குள்ள நல்லவர்களுக்கே வோட்டுப் போடுங்கள்' என்று சி. சுப்பிரமணியம் அறிக்கை விடுத்திருப்பது பற்றி?**

! அதைவிட முக்கியம் யாருக்கு வோட்டுப் போடக் கூடாது என்று அவர் கூறியிருப்பது தான். அந்தப் பழுத்த காங்கிரஸ்காரர் இன்றைய மத்திய ஆட்சியை விமர்சித்திருப்பதைப் படித்த எவரும் காங்கிரஸுக்கு வோட்டுப் போட மாட்டார். அதை விட்டால் மீதமிருப்பவரில் ஜெயிக்கவே முடியாதவருக்கு நம் வாக்கை அளித்தால் அந்த வோட்டு வீண் விரயமாகும். எனவே என்ன செய்ய வேண்டும் என்பது நமக்குத் தெரியும்!

* ஆர். ஸ்ரீதரன், கும்பகோணம்.

? **தம்பிதுரைக்கு இ. காங்கிரஸ் தன் தொகுதியை விட்டுக் கொடுத்திருப்பது எதைக் குறிக்கிறது?**

! 'சரணாகதி தத்துவத்தை' காங்கிரஸ் நன்றாகவே புரிந்து கொண்டு செயல்படுகிறது என்பதைத்தான்! சட்டமன்றத் தேர்தலின்போது மூப்பனார் அரும்பாடுபட்டுப் பெற்று அளித்த கௌரவத்தைப் புழுதியில் தள்ளிப் புரட்டி எடுத்து விட்டார்கள்!

* சா. ரமேஷ்பாபு, லால்குடி.*

? **தி. மு. க. — அ. தி. மு. க. தேர்தல் அறிக்கைகளை ஒப்பிடுக!**

! தி. மு. க. தேர்தல் அறிக்கை எல்லா அம்சங்களிலும் மிகவும் தெளிவாக உள்ளது. மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள், மத்தியில் கூட்டாட்சி, மத்திய — மாநில நல்லுறவுக் குழு, தேசிய அபிவிருத்திக் குழு, நேருவின் ஹிந்தி சம்பந்தமான உறுதி மொழி, மண்டல் கமிஷன் அறிக்கை, டீ. வி., வானொலி சுதந்திர நிறுவனங்களாவது, பஞ்சாயத்து, நகர சபைகளுக்குத் தன்னாட்சி உரிமை போன்ற பல அம்சங்களில் சீரிய சிந்தனை இருப்பதோடு தேசிய முன்னணியின் தேர்தல் அறிக்கையுடன் எந்த விதத்திலும் முரண்பட்டதாக இல்லை. ஆனால் அ. தி. மு. க. வின் தேர்தல் அறிக்கையோ பல அம்சங்களைத் தி. மு. க. அறிக்கையிலிருந்து கடன் வாங்கியது போல் இருக்கிறது! அவற்றைக் காங்கிரஸுடன் கூட்டுச் சேர்ந்து, காங்கிரஸை

*** ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**சா. ரமேஷ்பாபு,**
**34, புதுத்தெரு,**
**லால்குடி — 621 601.**

மத்தியில் ஆட்சியில் அமர்த்திய பிறகு அ. தி. மு. க. வினால் எப்படி அமுல்படுத்த முடியும்? முரண்பாடுகளின் மொத்த உருவமாகக் காட்சி தருகிறது!

*** ஃபிர்தௌஸ் ஜெஸி, கோவை.**

**? வி. பி. சிங் பிரதமரானால் போஃபர்ஸ் பிரச்னை என்ன ஆகும்?**

! வெடிக்கும்! அந்த ஓசை இத்தாலி வரை கேட்கும்!

*** வெள்ளக்கால் இரா. சந்தையா.**

**? ஏர்இந்தியாநிறுவனத்தின்சின்னங்களை மாற்ற வேண்டியது அவசியம்தானா? இதற்குக் கோடிக்கணக்கில் செலவு செய்வது தேவைதானா?**

! சற்றும் தேவையில்லாத மாற்றம்; பணச் செலவு. மகாராஜா சின்னம் குடியரசில் பொருந்தாது என்று யாரோ அதிமேதாவி எண்ணிவிட, மக்கள் பணம் விரயமாகிறது. 'வருகிற அயல்நாட்டவர் ஒரு மகாராஜா போல் நடத்தப்படுவார்' என்பதுதான் அர்த்தம். ஏர் இந்தியா மகாராஜா விரைப்பானவர் அல்ல; வளைந்து, பணிந்து வரவேற்பவர். அயல்நாடுகளில் ஒரு வாக்கெடுப்பு நடத்தியிருந்தால் மகாராஜா மகத்தான வெற்றி பெற்றிருப்பார்!

*** இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.**

**?. எதிர்க்கட்சிகள் தங்கள் தேர்தல் பிரசாரத்துக்கு டீ. வி. வானொலியிலிருந்து வந்த அழைப்பைப் புறக்கணிப்பது சரியா?**

! முதலில் போஃபர்ஸ் ஊழல் பற்றிப் பேசவே கூடாது என்றனர். அதனைத் தேர்தல் கமிஷன் ஆட்சேபிக்க, 'ஊழல் பற்றிப் பேசலாம்; ஆனால் பிரதமரை அத்துடன் இணைப்பது போல் பேசக் கூடாது' என்று தடை! இப்படி சென்ஸார் செய்யப்படுவதைத் தன்மானமுள்ள எந்தத் தலைவனும் ஆட்சேபிக்கவே வேண்டும். இந்த லட்சணத்தில்தான் எதிர்க்கட்சிக் கொள்கையைக் கடன் வாங்கி, டீ. வி. — ரேடியோவைத் தனி கார்ப்பரேஷன் ஆக்குவதாகக் காங்கிரஸ் தேர்தல் அறிக்கை கூறுகிறது! யார் நம்புவது!

*** ரேவதி சுந்தர்ராஜன், சென்னை — 28.**

**? காளிமுத்து — கோபால்சாமி: சபாஷ், சரியான போட்டிதானே?**

! அதைவிடப் பெரிய போட்டி, அதே தொகுதியில் தாமரைக்கனி — சாத்தூரார் போட்டி! அதை சபாஷ் என்பதா? தமாஷ் என்பதா? காளிமுத்துவுக்கு அரிவாள் ஏந்தியவர்கள் மேடையில் காவலிருக்க, செருப்புக்களும், கற்களும் மேடை நோக்கிப் பறக்க... அ. தி. மு. க. வை, 'அடிதடி முன்னேற்றக் கழக'மாக்குவதில் பெரு வெற்றி பெற்று விட்டார்கள்!

*** எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.**

**? உலக கிரிக்கெட் அரங்கில் கொஞ்ச நஞ்சமிருந்த பெருமையையும் காற்றில் பறக்க விட்டுவிட்ட கிரிக்கெட் அணியைச் சீர் திருத்த என்ன செய்வது?**

! அவர்களுக்குத் தரப்பட்டு வரும் பணம் போதாதாம்! தொழிற்சங்கம் போல் அமைத்துக் கேட்டுள்ள அதிகப்படி ஊதியத்தைக் கொடுத்தால் பாகிஸ்தான் டூரில் நெத்தியடி கொடுப்பார்களோ என்னவோ!

*** வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சை.**

**? பாராளுமன்றத் தேர்தல் முடிவுக்கும் தமிழக அரசின் ஆயுளுக்கும் சம்பந்தம் உண்டா?**

! 'இல்லை' என்று மூப்பனார் பெருந்தன்மை காரணமாகவோ, அல்லது தேர்தல் பிரசார யுக்தியாகவோ கூறியிருக்கிறார். ஆனால் அந்தக் கருத்து ''ஜெ அண்டு கோ'' வுக்கு ஏற்புடையதல்ல. எனவே, தி. மு. க. தொண்டர்கள் ஏமாந்து போகாமல் விழிப்புணர்வுடன் செயலாற்றுவது அவசியம்.

*** மஞ்சுதேவன், கல்கத்தா.**

**? வெங்சர்க்கார் அவ்வளவுதானா?**

! அவர் என்றைக்குமே கண்ணியம் காத்து வந்தவர். தமது மனமும் உடலும் சிறப்பான ஆட்டத்துக்கு ஒத்துழைக்கவில்லை என்று உணர்ந்த போது நேர்மையுடன் அணியிலிருந்து விலகிக் கொள்ள அனுமதி கேட்டு, நம் மதிப்பில் மேலும் உயர்ந்து விட்டார்.

*** என். அசோக், வேதாரண்யம்.**

**? டி. ராஜேந்தர் தனிக் கட்சி தொடங்கியிருப்பது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

! தேவையற்றது என்று நினைக்கிறேன். 'கலையுலகத் தோணி; அதில் எனக்கு ஒரு பாணி; தேவையில்லை அரசியல் ஏணி' என்று அவர் முன்பு கூறியதை நினைவூட்டுகிறேன். 'இருக்கிற நோட்டுக்களைப் பத்திரமாகப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்; அரசியலில் வேட்டு விட்டு விடாதீர்கள்' என்று எச்சரிக்கிறேன்!



* ராஜினாமா? * போஃபர்ஸ் வெடிக்கும்! * அரிவாள் காவல்! * அவ்வளவுதானா? * அரும்பாடுபட்டு...



# முகமற்ற எதிரிகள்

லிங்கன்

கோடைகாலத்தில், அலுவலகத்தை விட்டுக் கொஞ்சம் வெளிச்சத்தோடு வெளியே வர முடிந்தால் தென்காசி ரயில்வே ஸ்டேஷன் மேம்பாலம்தான் எனக்குப் புகலிடம்.

கான்டீனில் காப்பி சாப்பிட்டு விட்டு, பாலத்தை நோக்கித் திரும்பினேன். முதல் பிளாட்பாரத்தில் உயர் வகுப்புப் பிரயாணிகள் தங்கும் அறைக்கு முன்னால் உள்ள சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்திருந்தவர்கள் என் கவனத்தைக் கவர்ந்தார்கள். வெள்ளை வெளேரென்று வேட்டியும் முழுக்கைச் சட்டையும் அணிந்து ஓர் எழுபது வயதுப் பெரியவர் சிகரெட் புகைத்துக் கொண்டிருந்தார். அவருக்குப் பக்கத்தில் ஒரு பெண் புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள்.

அந்தப் பெண்ணைப் பார்த்தவுடன்தான் நான் சட்டென்று நிற்க வேண்டியதாகி விட்டது. அந்த முகம் இதற்கு முன் எங்கேயோ, எப்போதோ எனக்கு மிகவும் அறிமுகமான முகம்.

பிளாட்பாரத்தில் வாழைப் பழத் தோல் பொறுக்கும் வெள்ளாடு என்னைக் கடந்து போன நேரத்திற்குள் நான் அவளை அடையாளம் கண்டுபிடித்து விட்டேன்.

அவள் நிரஞ்சனா!

கிணற்றடியில் குளிக்கும் போதும், ஒழுங்குமுறை விற்பனைக் கூடத்தின் பக்கம் போக நேரும் போதும் நினைத்துப் பார்த்து விட்டு, இந்த ஜென்மத்தில் இனியொரு முறை சந்திக்கவா போகிறோம் என்று ஒரு பெருமூச்சோடு மறந்து விடுகிற நிரஞ்சனா!

அவள் மறுபடியும் தமிழ் நாட்டில் — இதோ என் கண்களுக்கு முன்னால் — சுமார் இருபது மீட்டர் தூரத்தில்!

ஆச்சரியமாகவும் இருந்தது. இதமான அதிர்ச்சியாகவும் இருந்தது.

இரண்டு ஆண்டுகளுக்கு முன் முடிந்த இருபதாம் நூற்றாண்டு. எண்பத்து மூன்று அல்லது எண்பத்து நான்காம் ஆண்டாக இருக்கலாம்.

இலங்கையில் இனக்கலவரம்.

உடைமைகள் அனைத்தையும் இழந்து விட்டு, உயிர் ஒன்றை மட்டும் காப்பாற்றிக் கொள்வதற்காக இருட்டோடு இருட்டாக இந்தியாவை நோக்கித் தோணிகளில் மிதந்து வந்து சேர்ந்த ஆயிரக்கணக்கான ஈழத் தமிழ்க் குடும்பங்களில் நிரஞ்சனாவுடையதும் ஒன்று.

நிரஞ்சனா, கம்பி மத்தாப்பு மாதிரி ஒல்லியாய் ஒரு தங்கை, விதவைத் தாய்.

காற்று மரண முற்றிருந்த ஒரு கோடைக் கால மதிய நேரத்தில் சுமார் இருபது குடும்பங்கள் எங்கள் ஊருக்கு ஒரு லாரியில் கொண்டுவரப்பட்டார்கள். உபயோகமற்றுக் கிடந்த ஒழுங்குமுறை விற்பனைக் கூடத்தில் குடியமர்த்தப்பட்டார்கள்.

இலங்கையிலிருந்து அகதிகள் வந்திருக்கும் சேதி தெரிந்ததும் தெருச் சூட்டையும், பகல் தூக்கத்தையும் பொருட்படுத்தாமல் ஆண்களும், பெண்களும் வேடிக்கை

பார்க்க ஓடினார்கள்.

அவர்களோடு எங்கள் வீட்டு 'அடங்காத வளும்' ஓடினாள்.

என் தங்கை புவனாவை அம்மா, "அடியே அடங்காதவளே..." என்றுதான் அழைப்பது வழக்கம்.

புவனா அகதிகளை வேடிக்கை பார்க்கப் போனதன் விளைவாக மறுநாள் காலையில் அவள் வயதை ஒத்த ஏழெட்டுப் பெண்கள் அழுக்குத் துணிகள், சவுக்காரக் கட்டி சகிதம் எங்கள் வீட்டுக் கொல்லைப்புறக் கிணற்றையும் பாத்ரூமையும் உபயோகிக்க வந்து விட்டார்கள்.

கூட்டம் என்றாலே — அதுவும் பெண்கள் கூட்டம் என்றாலே பயப்படும் அம்மா அகதிகள் என்பதால் அனுமதி வழங்கி விட்டாள்.

அவர்கள் குளித்தார்கள். துணி துவைத்தார்கள். துணிகள் காயும் வரை உட்கார்ந்து அந்த இனக்கலவர நேரத்திலும் தமிழ் சினிமா பற்றி அரட்டையடித்தார்கள்.

காய்ந்த துணிகளைக் கையில் மடித்துப் போட்டுக் கொண்டு மார்போடு அணைத்த வாறு அவர்கள் ஒவ்வொருவராய் வெளியேறிய போது கடைசியாக வந்தவள் மட்டும் என் அறை வாசலுக்கு நேராக வந்ததும் தயங்கி நின்றாள்.

"ஓ! நீங்கள் புத்தகம் படிக்கிறீங்களா?" என்று விசாரித்தாள்.

நான் நிமிர்ந்து பார்த்தேன்.

உலகத்தில் கறுப்புத் தேவதைகளும் உண்டு என்பது எனக்கு அப்போதுதான் தெரியும்.

"ஆமாம்" — என்று நான் சிரித்துக் கொண்டே தலையசைத்தேன்.

என் சிரிப்பை அவள் வரவேற்பு வார்த்தைகளாகப் பாவித்துக் கொண்டு அறைக்குள் வந்து விட்டாள்.

"அறையில் ஒரு புத்தக அலமாரி இருந்து விட்டால் அந்த அறைக்கே ஒரு தனி அழகு வந்து விடுகிறது இல்லையா?" என்றாள்.

சுவரில் ஆணியடித்துப் பொருத்தப்பட்டிருந்த ஐந்து அடுக்குகள் கொண்ட அந்தச் சின்னஞ்சிறு புத்தக அலமாரியை நோக்கி அவள் நகர்ந்து சென்றாள். புத்தகங்களை ஒவ்வொன்றாக எடுத்துப் பார்த்துக் கொண்டு அவற்றோடு உரையாடுவது போல் பேச ஆரம்பித்தாள் —

"எங்கள் யாழ்ப்பாணம் வீட்டிலும் ஒரு லைப்ரரி இருந்தது. எங்கள் அப்பா ஒரு கல்லூரிப் பேராசிரியர். அவருக்குப் புத்தகங்கள் என்றால் உயிர். நிறையப் படிப்பார். விடிய விடியப் படிப்பார். எனக்கும் அப்படித்தான். நானும் நிறையப் படிப்பேன். அப்பா வேலை பார்த்த கல்லூரியில் தான் நானும் படித்தேன். ஒருநாள் இரவு.

"தலைவரே! வெளியூரிலிருந்து ஆட்களை வரவழைத்துக் கள்ள வோட்டுப் போட வேண்டாம் என்று சொன்னேனே கேட்டீங்களா?"

"ஏன்! இப்ப என்ன ஆச்சு?"

"உங்க தொகுதியில் 'நூற்றி இருபது' சதவீதம் வாக்குப் பதிவு நடந்திருக்காம்!"

— க. சரவணகுமார்.



சிங்கள ராணுவத்தைச் சேர்ந்த சிலர் திடீரென்று எங்கள் வீட்டிற்குள் வந்தார்கள். அப்பாவுக்குப் புலிகளோடு தொடர்பு என்று சொல்லிப் புத்தகம் படித்துக் கொண்டிருந்த அப்பாவை எங்கள் கண் முன்னாலேயே சுட்டுக் கொன்றார்கள். அலமாரியிலிருந்த புத்தகங்களையெல்லாம் அப்பா உடல் மீது அள்ளிப் போட்டு பெட்ரோல் ஊற்றி...."

வார்த்தைகள் அதோடு நின்று விட்டன.

கையில் மடித்துப் போட்டிருந்த துணிகளில் ஒன்றை எடுத்துக் கண்களையும், கன்னங்களையும் துடைத்துக் கொண்டாள்.

நிரஞ்சனாவின் அறிமுகத்தில் ஆறு மாதங்கள் ஆறு நாட்கள் மாதிரி ஓடி விட்டன. ஆனால் அவள் பேச்சு புத்தக எல்லைக்கு வெளியே ஒரு அடி கூட எடுத்து வைக்க வில்லை. ஆனால் நானோ அருகிலேயே கனவு வட்டம் ஒன்றை வரைந்து வைத்துக் கொண்டு அதற்குள் அவளது பிரவேசத்தை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விநாடியும் எதிர்பார்த்துக் காத்திருந்தேன். அவள் படித்து விட்டுத் திருப்பித் தருகிற புத்தகங்களுக்குள், அவள் போன பிறகு, பக்கம் பக்கமாய்ப் புரட்டி எதையோ தேடினேன்.

ஒருநாள் ஒரு புத்தகத்திற்குள் ஒரு துண்டுக் காகிதம்.

மகிழ்ச்சித் துடிப்போடு அவசர அவசரமாக அதைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தேன்.

'அன்பு நிரஞ்சனா! நண்பர் 'செ' மூலம் நீ தமிழ் நாட்டிலிருந்து கொடுத்தனுப்பிய கடிதம் கிடைத்தது. அவர் மூலமாகவே நான் எனது பதிலையும் அனுப்புகிறேன். நீங்கள் பத்திரமாகத் தமிழ்நாடு சென்றடைந்ததை அறிந்து மகிழ்ச்சி. என் நெஞ்சுக்கு உள்ளே உறையும் உன் நினைவையும், வெளியே தவழும் சயனைட் குப்பியையும்

என்னால் சாகும் வரை பிரிய முடியாது. ஆனால் இருவரில் யாருக்கு வெற்றி கிடைக்கும் என்பதுதான் எனக்குத் தெரியவில்லை. முடிவு எப்படியிருந்தாலும் ஒன்று மட்டும் உறுதி. என் மரணத்திற்கு முந்தைய கணத்தை முழுமையாக உனக்கே சமர்ப்பிப்பேன். என்றும் உனது பிரியமுள்ள 'தி'...'

இரவு முழுதும் தூங்காமல் புரண்டு விட்டு மறுநாள் அந்தக் கடிதத்தை அவளிடம் ஒப்படைத்தேன்.

''ஓ... இது உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?'' என்று நாணம் கலந்த ஆச்சரியத்தோடு கேட்டாள்.

நான் அந்தப் புத்தகத்தைக் காண்பித்தேன்.

''படித்தீர்களா?''

நான் தலையசைத்தேன்.

''திலீப் என்னோடு காலேஜில் படித்தவர். கல்வியை விட மனிதனுக்குக் காற்று முக்கியம் என்று படிப்பைப் பாதியில் நிறுத்தி விட்டுப் புலிகளோடு சேர்ந்து விட்டார்.''

நான் பதில் ஏதும் பேசாமல் ஜன்னல் வழியாகத் தூரத்து வானத்தைப் பார்த்துக் கொண்டு தோளில் துப்பாக்கியையும், கழுத்தில் சயனைட் குப்பியையும், முதுகில் மரணத்தையும் சுமந்து கொண்டு நிரஞ்சனாவின் கையில் முத்தமிடுகிற ஓர் இருபது வயது இளைஞனின் இனம் தெரியாத முகத்தைக் கற்பனை செய்வதில் ஆழ்ந்திருந்தேன்.

அந்த நிகழ்ச்சி நடந்து பத்து நாட்கள் கூடக் கழிந்திருக்காது.

அன்று விடிந்து வெகு நேரமாகியும் நிரஞ்சனா குளிக்க வரவில்லை.

''யாழ்ப்பாணத்துக்குத் திருப்பி அனுப்புறதுக்காக ராத்திரியோட ராத்திரியாக எல்லா அகதிகளையும் லாரியில் ஏற்றி மண்டபத்துக்குக் கொண்டு போய்ட்டாங்களாம்'' — என்று அழுகையின் விளிம்பில் நின்று கொண்டு சொன்னாள் புவனா.

புவனா மட்டும் இப்போது இங்கே இருந்திருந்தால் நிரஞ்சனாவைக் கண்டதும் அழுதேயிருப்பாள் என்று நினைத்துக் கொண்டு ரயில்வே லயனைக் குறுக்காகக் கடந்து முதல் பிளாட்பாரத்தில் ஏறி அவள் உட்கார்ந்திருந்த பெஞ்சுக்கு முன்னால் போய் நின்றேன்.

''நிரஞ்சனா...!'' — பெயர் சொல்லியே அழைத்தேன்.

உயர்த்திப் பிடித்திருந்த புத்தகம் சட்டென்று தணிந்தது. என்னை நிமிர்ந்து பார்த்தாள். திணறியது சில விநாடிகள் கூட இருக்காது. அடையாளம் கண்டு கொண்டாள்.

''இங்கே கடல் போல் கூடி இருக்கிற மக்கள் இன்னும் இரண்டு கட்சிகளிடமிருந்து பணம் வாங்கியிருப்பதால் அவர்கள் அடுத்த பொதுக் கூட்டத்திற்குச் செல்ல வசதியாக எனது உரையை இதோடு முடித்துக் கொள்கிறேன்!''

— க. சரவணகுமார்.

# ஏர் ஹோஸ்டஸ்கள்



''ஓ... நீங்கள்..!'' கட்டுக்கடங்காத மகிழ்ச்சியில் சட்டெனா எழுந்து நின்றாள். நீங்கள் புவனாவோட அண்ணன் அல்லவா...!''

''ஆமாம்.''

'புவனா நலம்தானே? அம்மா நலம்தானே? புவனா இப்போது எங்கே இருக்கிறாள்? திருமணமாகி விட்டதா? எத்தனை குழந்தைகள்...?' என்று நிறையக் கேள்விகளை அடுக்கினாள்.

''புவனாவை ஈரோட்டில் ஒரு எஞ்ஜினியருக்குக் கொடுத்திருக்கிறது. இரண்டு பெண் குழந்தைகள். இருவரும் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிறார்கள். அம்மா இப்போது இல்லை. நான் தென்காசியில் தாலுகா விநியோக அதிகாரியாக இருக்கிறேன்...'' என்று அவளுடைய கேள்விகளுக்குப் பதில் சொன்னேன்.

எவ்வளவோ முயன்றும் என்னால் அந்தக் கேள்வியை முதலில் கேட்காமலிருக்க முடியவில்லை. அவள் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெரியவர் டிக்கெட் வாங்க எழுந்து சென்றதும் கேட்டேன்:

''நிரஞ்சனா. நீங்கள் ஜெயித்தீர்களா அல்லது சயனைட் குப்பி ஜெயித்ததா?''

இந்தக் கேள்வியை நிரஞ்சனா எதிர்பார்க்கவுமில்லை அவ்வளவாக விரும்பவுமில்லை என்பதை அவளுடைய மெலிதான முகச் சுளிப்பில் கண்டுகொள்ள முடிந்தது.

''ஓ! நீங்கள் அதை மறக்கவில்லையா?'' என்று கொஞ்சம் சிரித்து விட்டு, ''இரண்டு பேருமே ஜெயிக்கவில்லை'' என்றாள்.

''பிறகு?

''துப்பாக்கிக் குண்டுகள்தான் ஜெயித்தன.

''துப்பாக்கிக் குண்டுகளா...! ஓ... யாருடைய துப்பாக்கிக் குண்டுகள்?''

''துப்பாக்கிச் சனியனுக்கு என்ன அடையாளம் வேண்டிக் கிடக்கிறது? எங்களுக்கு எதிராக ஆயுதம் ஏந்தி வந்த எல்லா மனித முகங்களும் எங்களுக்கு மறந்து போய் விட்டன. ஆயுதங்கள் மட்டும்தான் நினைவுக்கு வருகின்றன. எங்கள் உறவினர்களையும் எங்களுக்குப் பிரியமானவர்களையும் துப்பாக்கிகளும், வெடி குண்டுகளும், கண்ணி வெடிகளும்தான் கொன்று குவித்தன.''

— நிரஞ்சனா கொஞ்சம் உணர்ச்சிவசப்பட்டு விட்டவள் போல் பேசினாள். அவள் என்ன சொல்கிறாள் என்பது எனக்குக் கொஞ்சம் தாமதமாகத்தான் புரிந்தது.

'ஆயுதம் தூக்கியவன் அந்த ஆயுதத்தாலேயே அழிவான்
பூமிக்கோளமும் ஆயுதபாணி ஆகிவிட்டது'

என்று எங்கோ படித்த கவிதை வரிகள் எனக்கு நினைவுக்கு வந்தன.

# மன்னிப்பார்களாக!




கற்பனை : ஜூலி.

# தேசத்தின் பாதுகாப்பு




- தொகை எவ்வளவு
என்பதல்ல
பிரச்சினை.

— நம்பிக்கை -
அரசின் மீது;
அரசை நடத்திச்
செல்வோர் மீது;

- இருக்க வேண்டிய
நம்பிக்கை!

— ஜனநாயகத்தின்
ஆணிவேராக
இருக்கும்
இந்த நம்பிக்கை
இப்போது
நாசமாகியிருக்கிறது.
வேலியே பயிரை
மேய்ந்திருக்கிறது.

# பத்திரமாக இருக்கிறதா?

## விளைவு?

அன்னிய அரசுகள்

'பிளாக் மெயில்'

செய்ய முயற்சிக்குமே!

இதனால்

இந்தியாவின் பாதுகாப்பே

கேள்விக் குறியாகி விட்டது!

நாட்டைக் காத்திடவும்;

நாட்டின்

கண்ணியம் காத்திடவும்;



**ஆதரிப்பீர்**



**உதய சூரியன்**

MCS/DMK/378

வெளியிடுபவர் - தி.மு.க., அண்ணா அறிவாலயம், சென்னை.

# தட்டி எழுப்பிய தலையங்கம்...



## வட்ட மேஜை

* 'செக்ஸ் உணர்வுகளைக் கட்டுப்படுத்துவது எப்படி?' படித்து மனத்தில் பதிய வைத்துக் கொள்ள வேண்டிய அருமையான கட்டுரை. உடல் பலவீனத்துக்குக் காரணம் மனத்தின் பலவீனமே! மனம் உறுதியாக இருந்தால் உடலைக் கட்டுப்படுத்தலாம். எத்தனை சத்தியமான வார்த்தை!

தாம்பரம், ர. ஜஹ்பர்சாதர்.

* நாங்கள் ஹிப்நாட்டிசம் மூலம் (இப்போது இதற்கு Relaxation Therapy என்று புதுப் பெயர்) எத்தனையோ சீர்கேடுகளைச் சீர்செய்து வருகிறோம். மனித மனத்தின் ஆற்றலைக் கண்டு எங்களுக்கே ஆச்சரியமாயிருக்கிறது. மனம் ஓர் அற்புதமான வீரியமான, உதவியான கரங்கம். அதை நாம் ஒழுங்காய் உபயோகப்படுத்திப் பயன் அடைய வேண்டும்.

ஆனால், பெரும்பாலான தமிழ்ப் பத்திரிகைகள் கொட்டை எழுத்தில், படிப்பவர்களுக்கு எந்தவித நல் உபயோகமுமில்லாதவற்றையே வெளியிடுகின்றன. இதனால் காலையில் எழுந்ததும் படிக்கும் செய்திகளெல்லாம் Negative Ideas களைத்தான் படிப்போர் மனத்தில் உற்பத்தி செய்கின்றன. இந்நிலையில் நீங்கள் வெளியிட்டுள்ள Cover Story விசேஷ மதிப்பு பெறுகிறது.

திருச்சி — 18, டாக்டர். எம். ராமநாதன், மனவியல் மருத்துவர்.

* சிதம்பரத்தில் கூத்தாடுவது எம்பெருமான் நடராஜன் மட்டுமல்ல; 'கோனாட, வறுமை கூட்ட மெல்லாமாட, குறவர் குலச் சிறுவன் எதிர்பார்ப்புடன் ஆடுவதை இன்றும் தில்லையில் காணலாம்.

கண்களால் தேரில் தான் கண்டதை 'மின்மினியிடம் கைவேந்தும் மின்னல்கள்' கதையில் வாசகர் கண்முன் நிறுத்திய தங்க சிவராசனுக்கு என் பாராட்டுக்கள் என்று சொல்வதை விட, ஒவ்வொரு வார்த்தையிலும் அழுத்தத்தைக் கொடுத்து உள்ளத்தைத் துளைத்து, இந்த நிலை என்று மாறும் என்று வாசகர்களை யோசிக்க வைத்தமைக்குப் பாராட்டுக்கள் சொல்ல வேண்டும்.

புரசைவாக்கம், சிவகாமி நடராஜன்.

* ஜிம்னாஸ்டிக்ஸ் விளையாட்டுப் படத்துடன் அளித்த தேர்தல் பற்றிய சில கருத்து விளக்கச் செய்திகள் வித்தியாசமாக இருந்தன.

வேலூர், கே. ஆர். தேவேந்திரன்.

* தஞ்சாவூர் நகரில் புதிய நீச்சல் குளம் ஒன்றினைத் திறந்து வைத்துப் பேசிய முதல் அமைச்சர் கருணாநிதி நீச்சல் குளத்துக்கு ராஜ ராஜ சோழனின் சகோதரி குந்தவையின் பெயரைச் சூட்டுவதாக அறிவித்தார். இந்தப் பெயர் சூட்டலை, அறிவுபூர்வமாக ஒப்புக் கொள்ள முடியவில்லை. சோழர்களின் வீர வரலாற்றில் குந்தவை சிறந்த ராஜ தந்திரியாகச் சித்திரிக்கப்படுகிறாள். இந்த மேன்மையான பாத்திரத்தைக் கொச்சைப்படுத்துவதாக உள்ளது முதல்வரின் பெயர் சூட்டும் காரியம்.

திருச்சி — 17, ராமகிருஷ்ணன்.

* கல்கியில் மேட்டுப்பாளையத்தைப் பற்றிப் படிகவாரசியமாக நாலு பக்கத்திற்கு 'மேட்டர்' போட்டவுடனேயே தெரிந்த போச்சு! நிறைய "மேட்டர்" உள்ள பாளையம், மேட்டுப்பாளையம் என்று...

திருநகர், எம். பி. துரைஸ்வாமி.

* கடந்த வாரக் கல்கி இதழில் இடம்பெற்ற கேள்வி ஒன்றுக்கு செல்வி ஜெயலலிதா சேவல் சின்னம் பொறித்த வேட்டி, சேலை கொடுக்கவில்லையா என்று வினா எழுப்பியிருந்தீர்கள். அது அ.தி.மு.க. பணம் — சுருக்கமாகச் சொல்லப் போனால் 'தன் கடைத் தேங்காயைப் பிள்ளையாருக்கு உடைக்கும் முயற்சி.' ஆனால் கலைஞர் செய்வதோ 'கடைத் தேங்காயை வழிப் பிள்ளையாருக்கு உடைத்து, வோட்டு வரம் கேட்கும் முயற்சி' என்பது உங்கள் அறிவுக்கு எட்டவில்லையே ஏன்?

மதுரை — 16, எஸ். நாராயணன்.

* தராசு பகுதியில், 'தார்மீக ரீதியில் இந்த இலவச விநியோகத்தைத் தேர்தலை முன்னிட்டுத் தாற்காலிகமாகக் கலைஞர் நிறுத்தி வைப்பதே முறையானதாயிருந்திருக்கும்... ஆனால் ஒன்று, சட்டசபைத் தேர்தலுக்கு முன் தமது தொகுதியில் சேவல் முத்திரையிட்ட சேலைகளை விநியோகித்த ஜெயலலிதாவுக்குக் கலைஞர் மீது குற்றம்சாட்ட உரிமையில்லை' — என்று இருவரையும் கண்டித்துப் பதில் அளித்த கல்கியாருக்குப் பாராட்டுக்கள்!

சீர்காழி, சண்பை. சிவ. சண்முகம்.

* 'எம்.ஜி.ஆர். பக்தர்களின் வோட்டு' தலையங்கம் கண்டேன். வாக்காளர்கள் நமது தேசத்தின் இன்றைய அவல நிலையைச் சீர்தூக்கிப் பார்த்துச் சரியான முடிவுக்கு வர வேண்டும் என்ற உன்னத நோக்கில் எழுதப்பட்ட உயர்வான தலையங்கம் அது. ஒரு நல்ல பத்திரிகையின் அடையாளம் ஆட்சியாளர்களின் தவறுகளைச் சுட்டிக் காட்டுவது; ஆட்சியாளர்கள் திருந்தாவிடில் மக்களை விழிப்புணர்வு பெறச் செய்து தவறு செய்வோரின் ஆட்சியை அகற்றுவது; இவ்விரண்டு பணிகளிலும் 'கல்கி'க்கு நிகர் கல்கியே!

உனது வோட்டு ஒரு யோக்கியனுக்கு விழுந்தால் உனது எதிர்காலம் காப்பாற்றப்படுகிறது; ஓர் அயோக்கியனுக்கு உனது வோட்டு விழுந்தால் அவனது எதிர்காலம் காப்பாற்றப்படுகிறது என்ற பொன் மொழியை எம்.ஜி.ஆர். பக்தர்கள் மட்டுமல்ல ராஜீவ் அபிமானிகள் கூடச் சிந்தித்துச் செயல்பட வேண்டிய நேரமிது!

தக்கோலம், ஆ. புகாரி.

* 'நிலையான ஆட்சி' என்ற ஒரேயொரு காரணத்திற்காகவே வரும் பாராளுமன்றத் தேர்தலில் இ. காங்கிரசுக்கு வாக்களிப்பது என்ற முடிவோடு இருந்த என்னை, தங்களின் 'எம்.ஜி.ஆர். பக்தர்களின் வோட்டு' தலையங்கம் மறுபரிசீலனை செய்ய வைத்து விட்டது. வெல்டன்!

கும்பகோணம், எஸ். வெங்கடேசன்.

# தலையில் குட்டிய கவர் ஸ்டோரி!



# மந்திரி பதவியை வேண்டாம் என்றவர்!

நமது அரசியல் தலைவர்களில் 'அன்னையரும் உண்டு; உடன்பிறப்பான அண்ணன்மார்களும் உண்டு! அவர்கள் என்ன செய்கிறார்கள்? தாங்கள் பதவியில் இருக்கும்போதே தங்கள் பிள்ளைகளைக் கட்சிக்கும் ஆட்சிக்கும் வாரிசாகப் படிப் படியாக உருவாக்குகிறார்கள்! காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரை இந்தக் காட்சிகளைப் பார்க்கும் இன்றையத் தலைமுறையினருக்கு, ராஜாஜியும் அவரது மகன் ஸி. ஆர். நரசிம்மனும் போன்ற சிலர், ஜனநாயக—தார்மிகக் கோட்பாடுகளைக் கடைப்பிடித்து, அண்மைக் காலத்தில் கூட நம்மிடையே வாழ்ந்தார்கள் என்பதை நம்புவதே கடினமாக இருக்கும்!

மகன் ஸி. ஆர். நரசிம்மனின் வளர்ச்சிக்காகச் சுண்டு விரலைக் கூட அசைக்காதவர் ராஜாஜி. தப்பித் தவறிக் கூட ஒரு வார்த்தை அவரது வளர்ச்சியில் தாம் அக்கறை கொண்டிருப்பது போலப் பேசிவிட மாட்டார்! தந்தைதான் இப்படி எனில் மகன் அவருக்கு ஒரு படி மேலே! நேருஜி துணை அமைச்சர் பதவியை அழைத்துக் கொடுக்க, அதை வேண்டாம் என்று மறுதளித்த ஒரே நபர் ஸி. ஆர். நரசிம்மனாகத்தான் இருக்க முடியும்! கிருஷ்ணகிரி தொகுதியிலிருந்து இருமுறை எம். பி. யாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸி. ஆர். என். இவ்வாறு மறுதலிக்கக் காரணம், அப்போது நேருஜிக்கும் ராஜாஜிக்கும் இடையே கருத்து மோதல்கள் ஆரம்பமாகி இருந்ததுதான். தாம் நேருஜியின் அமைச்சரவையில் இடம் பெற்றதால் அது தமது தந்தைக்கு மட்டுமல்லாது பிரதமருக்கும் கூட ஏதேனும் ஒரு சந்தர்ப்பத்தில் ஒரு தர்மசங்கடத்தை ஏற்படுத்தி விடக் கூடுமோ என்ற தயக்கத்தினால், 'நன்றி, ஆனால் அதை வேறு ஒருவருக்குக் கொடுங்கள்' என்று கூறிய பெருந்தன்மையாளர் அவர். இப்படித் ''தன்னை'' அழித்துக் கொண்டு, அவர் வாழ்ந்தது கூட வெளியே தெரியக் கூடாது என்று எண்ணிய அடக்க சிலர்.

''பொது வாழ்வில் என்னுடைய கடுமையான நெறிமுறைகள் காரணமாக என் மகனின் வளர்ச்சிக்குக் கூடத் தடையாக இருந்திருக்கிறேன்,'' என்று ஸி. ஆரே தமது நெருங்கிய நண்பரிடம் ஒரு முறை வருத்தப் பட்டுப் பேசியதுண்டு.

அமைச்சர் பதவியைத்தான் வேண்டாம் என்று மறுத்தாரே தவிர, வேறு ஒரு பதவியை மகிழ்ச்சியுடன் ஏற்றார் ஸி. ஆர். நரசிம்மன். அது, பொது நலத் தொண்டாற்றும் காந்தி ஆசிரமத்தின் தலைமைப் பதவி. ராஜாஜி ஆரம்பித்து வைத்து நடத்தி வந்த திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தின் தலைவராக இருந்து, நரசிம்மன் அதில் பல புதுமைகளைப் புகுத்தினார். புதுமை என்றால் இயந்திர மயமாக்குவதோ, கம்ப்யூட்டரை நிறுவுவதோ அல்ல. மக்களின் இன்றையத் தேவைகளுக்கு ஏற்பச் சிந்தித்து, காந்திய நெறிமுறைகளுக்கு உட்பட்டுப் பல மாற்றங்களைச் செய்து, காந்தி ஆசிரமத்தில் உற்பத்தி அதிகரிக்கவும், உற்பத்திப் பொருள்களுக்கு ஒரு மவுசு ஏற்படவும் வழிவகுத்தார். சுற்று வட்டார மக்களின் வருவாய் பெருகச் செய்தார்.

தேச நலன் சம்பந்தப்பட்ட சில பிரச்

னைகளில் தமது தந்தையாரிடம்கூட மாற்றுக் கருத்துக்கூறி ஸி. ஆர். என். விவாதித்ததுண்டு. தெளிவு பிறக்க இருவருக்குமே அந்த விவாதங்கள் உதவியிருக்கின்றன. ஆனால் பஸ்லுல்லா சாலை வீட்டின் மாடி அறைக்கு அப்பால் அந்த விவாதக் குரல்கள் ஒலிக்காது!

அண்மைக்காலத்தில் கல்கி தலையங்கங்களைப் படித்துவிட்டு அவ்வப்போது ஃபோன் செய்வார், நரசிம்மன். ஸி. ஏ. ஜி. யின் அதிகாரங்கள், அப்பதவியின் முக்கியத்துவம் போன்ற சில விஷயங்களைப் புரிந்து கொள்ள உதவுவார். "'நேற்றுதானே ஒருவரை வாழ்த்தி எழுதினோம்? இன்று அவரையே தாக்க நேர்கிறதே?' என்று தயங்காதே! தனி நபர்கள் முக்கியமல்ல; அவர்களுடைய இன்றையச் செயல்கள்தான் நமது விமர்சனத்துக்கு உள்ளாக வேண்டும்!" என்று பத்திரிகை தர்மத்தை வலியுறுத்தித் துணிவு தருவார்.

மரணத்தை எதிர்கொள்ளும் போது கூட அவருடைய அடக்கமே முன்னின்றது. "ஸி. எம்.முக்கு ஃபோன் செய்தால் உடனே ஜி. எச்.சில் வி. ஐ. பி. வார்டில் சேர்த்துச் செலவின்றி நன்றாகக் கவனிப்பார்கள்" என்று யாரோ சொல்ல, "அப்படியெல்லாம் அவர்களுக்குத் தொந்தரவு தரக் கூடாது" என்று மறுத்து விட்டார்! தனியார் மருத்துவமனைக்கு அழைத்துப்போகப்பட்ட போது எதிரே திருச்செங்கோடு காந்தி ஆசிரம நண்பர் வர, "என்னை ஆசிரமத்துக்கு அழைத்துப் போய்விடுங்கள்," என்று வேண்டினார். அங்கு அமைதியடையவே அவர் ஆன்மா ஏங்கியது. ஆனால் அதற்கு இடம் தராமல் 'அவரை எப்படியாவது காப்பாற்றி விடலாம்' என்ற சுற்றியிருந்தோரின் ஆசை தடுத்து விட்டது.

பெரும் பதவியில் இருந்த பலர் அன்று ராஜாஜியின் மகனுக்கு மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்த வந்தனர். ஆனால் சோகமே உருவாக நின்ற காந்தி ஆசிரம ஊழியர்களும் கதறி அழுத வேறு பல எளிய மக்களும் உத்தமர் ஸி. ஆர். நரசிம்மனை இழந்து விட்டோமே என்பதற்காகவே வந்தவர்கள். அவர்களுக்குத் தெரியும், சூரியப் பிரகாசம் மட்டும் போதாது. சந்திரனின் குளுமையும் நமக்குத் தேவைதான் என்பது!

— கி. ராஜேந்திரன்.

---

'கல்கி' கலர் டீ. வி. பரிசு பெற்றவர் கன்னியாகுமரியில் வாழும் ஆ. ஆல்பர்ட். அவரை இல்லத்தில் சந்தித்தோம்.

ஐம்பத்திரண்டு வயதாகும் ஆல்பர்ட், கடந்த பத்து ஆண்டுகளாகக் 'கல்கி' வார இதழைத் தொடர்ந்து படித்து வருகிறார். கரஸ்பாண்டென்ஸ் கோர்ஸ் மூலம் 'பத்திரிகை இயல்' படித்திருப்பதோடு, பம்பாயிலிருந்து வெளியாகும் 'Profit' என்ற ஆங்கில வார இதழில் துணை ஆசிரியராகச் சுமார் ஒன்றரை ஆண்டுகள் பணியாற்றியுமிருக்கிறார். தற்போது நாகர்கோவிலில் அச்சகப் பணி புரிகிறார்.

"இதுவரை நான் தமிழ்ப் பத்திரிகையில் எழுதியதில்லை! எந்தப் போட்டியிலும் பங்கு கொண்டதுமில்லை! 'கல்கி'யைத் தொடர்ந்து படித்து வருவதால், இந்தப் போட்டியில் பங்கு கொள்ளலாமே என்று நினைத்தேன். டீ. வி. சம்பந்தமான நகைச்சுவைச் சம்பவம் ஒன்றை எழுதி அனுப்பினேன். அந்தத் துணுக்கு பிரசுரமாகிச் சன்மானம் பெற்றதோடு கலர் டீ. வி. யும் பரிசாகக் கிடைத்தது. நான் பங்கு கொண்ட முதல் போட்டியிலேயே சிறப்புப் பரிசு பெற்றதை நினைக்கும் போது... என் மனமகிழ்ச்சியை எப்படி வார்த்தையினால் சொல்வது என்று தெரியாமல் திணறுகிறேன்...!" என்றார்.

நடுத்தர குடும்பத்தைச் சார்ந்த ஆல்பர்ட்டின் ஒரே மகன் மனோஜ், திண்டுக்கல் பொறியியல் கல்லூரியில் படிக்கிறான். மனைவி, பிரேமா குமாரி பள்ளி ஆசிரியையாகப் பணியாற்றுகிறார்.

"பரிசு பெற்ற விவரத்தை அறிந்த போது..... உங்கள் மனநிலை எவ்வாறு இருந்தது....?"

"வழக்கம் போல பிரஸ்ஸுக்குப் போய் விட்டு வீடு திரும்பிய என்னிடம், என் மனைவி 'நமக்கு கலர் டீ.வி. பரிசு கிடைத்திருக்கிறது!' என்று கூறினாள். முதலில் நான் அதை நம்பவில்லை. பிறகு 'கல்கி'யை வாங்கிப் பார்த்தால்.... கலர் டீ.வி. பரிசு பெற்றவர் என்ற விவரத்துடன் கீழே எனது பெயரும் முகவரியும் இருப்பதைக் கண்டு இன்ப அதிர்ச்சி! வாழ்க்கையில் இத்தனை வருஷங்களுக்குப் பிறகு, முதன் முதலாக ஒரு பரிசு கிடைத்திருப்பதை எண்ணி மகிழ்ச்சி அடைகிறேன். நான் வாழ்க்கையில் மிகவும் கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்தவன். இந்தக் கலர் டீ.வி. பரிசு மூலம், ஒளிமயமான எதிர்காலத்தை எதிர்பார்க்கிறேன்! பத்திரிகைகளில் தொடர்ந்து எழுத வேண்டும் என்ற உற்சாகமும் உண்டாகியிருக்கிறது!" என்றார்.

சந்திப்பு, புகைப்படம்:
**குளச்சல் இப்ராஹீம்.**



கல்கி
கலர் டீ. வி.
பெற்ற
கன்னியாகுமரி
ஆல்பர்ட்!

# இலவசம்! பக்தி புத்தகங்கள்



## இலவச பக்திப் புத்தகங்கள் எங்களிடம் ஒரே தடவை-யில் ரூ. 200-க்கு மேற்பட்ட ஸ்வீட், காரம் வாங்குபவர்களுக்கு வாங்கும் தொகையை அனுசரித்து பக்திப் புத்தகங்கள் இலவசமாக வழங்கப்படும்.

---

கல்யாண வைபவங்களுக்கு: சீர் முறுக்கு, சீர் முள்ளுத் தேன் குழல், தேன் குழல், அதிரசம், திரட்டுப்பால், அப்பம், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்துத் தரப்படும்.

---

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2-வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை-600 020.
போன்: 412557



படம்: சுபா

# காங்கிரஸை எதிர்க்கும் ஒரு காங்கிரஸ் அபிமானி!

"என் உடம்பில் ஓடுவது காங்கிரஸ் ரத்தம்தான். நாற்பது வருஷம்போல, காங்கிரஸிலேயே இருந்துவிட்டு, இன்றைக்கு வெளியே வந்துவிட்டாலும், இன்னும் காங்கிரஸின் அடிப்படைக் கொள்கைகள் மீது எனக்கு அபிமானம் உண்டு" என்கிறார் இளைய பெருமாள். அப்படியானால் சிதம்பரம் (ரிசர்வ்) தொகுதியில் சுயேச்சையாக ஏன் போட்டியிடுகிறார்? இதைத் தெரிந்து கொள்ள நம் நிருபர் அவரைச் சந்தித்தார்.

எல். இளைய பெருமாள் முன்னாள் தமிழ்நாடு இ. காங்கிரஸ் கமிட்டித் தலைவர். இப்போதும் கதர் ஆடைதான் அணிகிறார். தாழ்த்தப்பட்ட இனத்தின், வெகு ஜனத் தலைவர் இவர் என்பது, சிதம்பரம் தொகுதியில் இவர் வோட்டுக் கேட்கப் போன போது கூடவே சென்றதில் கண்கூடாய்த் தெரிந்தது. 52 முதல் 67 வரை மூன்று முறை சிதம்பரத்திலிருந்து பாராளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் இளைய பெருமாள்.

"காங்கிரஸ் அபிமானியான நீங்கள் இன்று காங்கிரஸ் வேட்பாளருக்கு எதிராகவே போட்டியிட வேண்டிய சூழ்நிலைக்கு என்ன காரணம்?"

"1964 — இல் நேருஜி, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அரசாங்கம் அளிக்கும் சலுகைகள் எவ்வளவு தூரம் அவர்களுக்கு உண்மையில் போய்ச் சேருகிறது என்று ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிக்க ஒரு கமிட்டி அமைத்தார். அதற்கு 'இளைய பெருமாள் கமிட்டி' என்றே பெயர். 65—ஆம் ஆண்டு இறுதியில் லால் பகதூர் சாஸ்திரியிடம் ஓர் இடைக்கால அறிக்கையையும், 69—இல் இந்திராஜியிடம் முழுமையான அறிக்கையையும் சமர்ப்பித்தேன். தீண்டாமையை ஒழிப்பது பற்றியும் நான் அதிலே குறிப்பிட்டிருந்தேன். இந்திரா காந்தி, கொள்கை அளவில், அறிக்கையை ஏற்றுக்கொண்டார். ஆனால் அதைச் செயல்படுத்த எந்த ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை. நான் இதுபற்றிக் கட்சி அளவில், தொடர்ந்து எடுத்துச் சொல்லியும் ஒரு பலனுமில்லை.

"நான் முன்பு நடத்தி வந்த மனித உரிமைப் பாதுகாப்புக் கழகம், இப்போது மனித உரிமைக் கட்சியாகி விட்டது. கடந்த சட்டசபைத் தேர்தலின் போது, பதினெட்டு இடங்களில் போட்டியிட்டு, ஓர் இடத்தில் வெற்றி பெற்றோம்.

"இந்த நாடாளுமன்றத் தேர்தலின் போது, என்னை மறுபடி காங்கிரஸில் சேரும்படி அழைத்தார்கள். "என் கமிட்டி அறிக்கையில் கூறியவிஷயங்களைச்செயல்படுத்துவதாய்த் தேர்தல் அறிக்கையில் குறிப்பிடுங்கள். அது அரிஜன மக்களுக்கு ஒரு பெருமையை அளிக்கும்" என்றேன். அதைக் காங்கிரஸ் காதில் போட்டுக் கொள்ளவேயில்லை. என் செல்வாக்கை, தனக்குச் சாதகமாய்ப் பயன்படுத்திக் கொள்வதில்தான் காங்கிரஸுக்குக் குறி. இதில் எனக்குக் கோபம்.

"நான் தேர்தலில் போட்டியிடப் போவது தெரிந்து தில்லிக்கு அழைத்து, 'காங்கிரஸ் சீட் தருகிறோம்' என்றனர். நான் எனது சொந்தத் தொகுதியான சிதம்பரம் தொகுதியைக் கேட்டேன். சரியெனத் தலையாட்டிவிட்டு, கடைசியில், "ராசிபுரத்தில் தருகிறோம்" என்று கூறிவிட்டனர். சுயநலம் கொண்ட காங்கிரஸ், என்னை அவமானப்படுத்திவிட்டது. நான் (எனது கட்சியின் சார்பில்) சுயேச்சையாய் வேட்பு மனு தாக்கல் செய்தேன். இப்போது, என்னைப் போட்டியிலிருந்து வாபஸ் பெறும்படியும், சில லட்சங்கள் தருவதாய்க் கூறி விலைக்கு வாங்கப் பார்க்கிறார்கள். "எனக்குக் காசு வாங்கிப் பழக்கமில்லை. கண்டிப்பாய்த் தேர்தலில் போட்டியிடத்தான் போகிறேன்," என்று நான் கூறிவிட்டேன்."

"எதிர்க்கட்சிகள் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"

"எதிர்க்கட்சிகள் மீது நம்பிக்கையில்லை. ஆனால் அதே சமயம் தவறான போக்குகளுக்காகக் காங்கிரஸ் தண்டிக்கப்பட வேண்டும் என்பதிலும் சந்தேகமில்லை."

சந்திப்பு: எஸ். சந்திரமௌலி

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கெ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

# ஸ்லீப்பர் பாதுகாப்பு



## கொசுக்களை ஒழித்திட குட் நைட் ஒன்றுதான் சர்வதேச SP வாக்குறுதி தருவது.

ஜப்பான் நாட்டு சுமிட்டோமோ விலிருந்து இறக்குமதி பெற்ற இரசாயனப் பொருள்கள் மற்றும் உள்-உறுப்புக்கள். என்றும் மாறாது நிலைநிறுத்தப்படும் சர்வதேச நிர்ணயத் தரங்கள்.

இவற்றுக்கெல்லாம் அங்கீகாரமாக குட் நைட்டுக்கு, பெருமதிப்புமிக்க SP முத்திரை வழங்கப்பட்டது: தரத்தின் சின்னமாக, உலகில் **மிகச் சிலவற்றுக்கே அளிக்கப்பட்ட விருது. இதனை இந்தியாவில் வென்றுள்ளது குட் நைட் ஒன்றுதான்.**

**சுமிட்டோமோவின் கறாரான சர்வதேச நிர்ணயத் தரங்களுக்கு இணங்க, சுமிட்டோமோ பைரத்ராயிடு** கொண்டு தயாரிக்கப் பட்டது குட் நைட் என்பதற்கு உத்தரவாத முத்திரை எஸ்பி.

ஆகவேதான், மிகப்பல மக்கள் கொசுக்களுக்கு "குட் நைட்" போட்டு விடை கொடுக்கின்றனர். அவர்களுக்குத் தெரியும் ஸ்லீப்பர் பாதுகாப்புக்கு நம்பிக்கையானது குட் நைட்.




# குட் நைட்



SP என்றால்
சுமிட்டோமோ பைரத்ராயிடு.

இனிய தூக்கம் இன்பக்கனவு
யாவருக்கும் குட் நைட்.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

"என் மனைவி சொல்கிறாள் ஸேல்ஸ்மேனிடம்...
ரெஃப்ரிஜெரேட்டரில் சீஸ் (பனீர்) மெதுவாக இருக்கவேண்டும்,
ஐஸ்க்ரீம் (குல்ஃபி) கெட்டியாக இருக்கவேண்டும்.
இதைக் கேட்டு எனக்குப் பேச்சே வரவில்லை."




**காரணம் ஏதானாலும், விருப்பம் ஒன்றே—கோத்ரெஜ்**

MEGA FORCE

கட்டுறுதியான, சக்தித் திறனுள்ள கம்ப்ரெஸர், சர்வதேச தரமுள்ள 100% பாலியூரதேன் இன்சுலேஷன் **கூல்காற்று** காரணமாக, **விரைவில் குளிர்விக்கும், குறைந்த மின்செலவில்.**

இன்னும் சில உன்னத சிறப்பியல்புகள்:

**ஸ்பெக்ட்ராம்—** விசேஷ வண்ண அணிவரிசை

**அல்ட்ராஸ்பேஸ்—** திறமுடன் வடிவமைத்த உட்புறம், பொருள் வைக்க அதிக இடவசதியளிக்கிறது



விரைவான, நம்பகமான சேவைக்கென, பரவலான டீலர் குழு.

கோத்ரெஜ், பல ஆண்டுகளாக மக்களுக்கு நம்பகமான பெயர். இங்கு ஒவ்வொரு நாளும், தொழில் நுட்பத்தை மேம்படுத்தவே செலவிடப் படுகிறது. இன்று, எமது நவீன தானியங்கி ஆலையிலே, நிஜமாகவே சர்வதேச தரத்திலான ரெஃப்ரிஜெரேட்டர் உருவாகிறது. ஏனெனில், உங்களுக்கு மிகச் சிறந்ததையே நாங்கள் தர விரும்புகிறோம்.

நம்பகம்...அதுவே- Godrej

HTA 1667